சென்னைப் பதிவு எண் கடுOக

இதன் விலை அணா ஒன்றரை.

தந்தி விலாசம்:—"OOLIAN."

# ஊழியன்

செவ்வாய்தோறும் திகழ்வது.

சந்தா விபரம்.

| | |
|---|---|
| வருடச் சந்தா ... | ௩—0—0 |
| ஆறுமாதச் சந்தா ... | க—0—0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ௪—0—0 |

விளம்பர விகிதம்.

அங்குலம் ஒன்றுக்கு வாரம் ஒன்றுக்கு 0—௮—0
நீடிமன்ற விளம்பரம் அங். ஒன்றுக்கு க—0—0
ஒப்பந்த விளம்பரவிகிதத்திற்குக்காரியஸ்தருக்கு எழுதவும்.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. —திருக்குறள்.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். —திருக்குறள்.

மலர் அ. காரைக்குடி. பிரபவ-ஸு ஐப்பசி-மீ கஅ-உ (க—கக—உஎ) இதழ் கூ

உலகத்தில் முன்னேற்றமடைய விரும்பும் ஒவ்வொருவருக்கும் ஓர் இலக்குவேண்டும். எவ்வித உயர்ந்த கொள்கையுமில்லாது சமயத்துக்குத் தகுந்தாற்போல் நடந்துகொள்ளும் மனிதரே இந்நாள் அதிகமாகக் காணப்படுகின்றனர். அத்தகையோர் முன்னேற்றமடைதலரிது. அவர் பெரும் பாவிகளாவர். நேர்மையும் ஒழுக்கமும் கொள்கையுமில்லாது உலகமக்கள் எல்லாரிடத்தும் நல்ல பேயர் வாங்கிக்கொள்ள வேண்டுமென்ற ஒரு எண்ணத்துடனேயே தமது வாழ்க்கையை நடாத்தும் எவரும் வளர்ச்சியுறுதல் இயலுமோ? அவர் எவ்வளவு முயன்ற போதிலும் அறிஞரிடத்தில் மட்டும் அவர் நற்பெயர் வாங்கிக்கொள்ள முடியாதென்பது திண்ணம்.

* * *

இவர் மக்களை ஏமாற்றுபராவர். இவரது சூழ்ச்சியில் அகப்பட்டு ஏமாந்றமுறும் மக்களே பெரும்பாலராவர். அவ்வேமாளிகள் தமது தலைவரின் நஞ்சகத்தை அறியாப் பிள்ளை மதியினராவர். அவரும் தமது தலைவர் போன்று எத்தகைய கொள்கையுமில்லாதவரே. ஆனால் முன்னவரோ ஒன்றுமறியா வெள்ளறிவினர். பின்னவர் அறிந்து அவரை ஏமாற்றி அவரிடம் செல்வாக்குப்பெற முயல்பவர். ஆராய்ச்சி யறிவின்றி, தலைவர் சொல்வதெல்லாம் வேதவாக்காக நினைத்து மகிழும் இவர் "வேர்தனைத்தின்று விதிவந்தால் சாவது" என்னும் பழமொழிக்குப் பேரிலக்கியமாகத் திகழ்கின்றார்.

* * *

நாட்டில் ஆராய்ச்சியறிவைப் பெருக்க வேண்டும். மக்கள் ஒவ்வொருவரும் உயர்ந்த இலட்சியத்தைக் கடைப்பிடித்து அதை நோக்கித் தமது வாழ்க்கையைத் திறம்படச் செலுத்தவேண்டும். இலக்கை நோக்கிச் செல்லுங்காலையில் தமது அறியாமையாலோ பலவீனத்தாலோ சில சமயங்களில் தவறு நேர்ந்தாலும் ஊக்கத்தைவிடாது தவறை மன்னித்துச் சக்தியளிக்கும்படி கடவுளை வேண்டிக்கொண்டு "இனி யான் தவறேன். எனது சக்திவளர்ச்சி யுறுகிறது" எனச் சிந்தித்து நெறிபிறழாது மேல்நோக்கிச் செல்தல் வேண்டும்.

* * *

நாம் நமது இலட்சியத்தை நிறைவேற்ற முயலுங்கால் பல இடையூறுகள் நிகழலாம். அவை நண்பர்களாலும் பகைவர்களாலும் கடவுளாலும் நிகழ்வன. இம்மூன்றுவித இடையூறுகளே ஒரு குறிக்கோளை நோக்கிச் செல்லும் ஒருவனைச் சந்திப்பன. நாம் ஒவ்வொரு இடையூற்றையும் வென்று மேன்மேலும் ஊக்கமாகச் செல்லச்செல்ல நமது சக்தியானது அதிகரிக்கின்றது.

* * *

ஏதாவது நல்ல காரியத்தைச் செய்ய முயலும் ஒருவனை அவனது நண்பர்களும் உற்றார்

## மலர்மணம்.

### குறியும் செயலும்.

திருவாளர் சா. நா. சா. அருணசலம் செட்டியார் எழுதியது.

உறவினரும் தடுத்து "நீ ஏன் அதில் தலையிடுகிறாய்? அது மிகக் கஷ்டமான காரியமாகும். மக்களால் பழிக்கப்படுவோம் நாம் ஏன் அதற்கெல்லாம் போகவேண்டும்? கடவுள் கொடுத்த சொத்து இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு சௌகரியமாக நீ இங்கேயே சாப்பிட்டுக்கொண்டிரு. அதெல்லாம் நமக்கு வேண்டாம்" என்று 'புத்தி'புகட்ட முயல்வதை நாம் சாதாரணமாகப் பார்க்கிறோம். இன்னும் சரியான உணர்வு அரும்பாதவர் இக்கட்டுப்பாட்டுக்கு இணங்கி அடங்கிவிடுவர். உணர்வானது மனத்தில் ஊர்ந்தூறி ஊனோடு உயிரோடு கலந்து ததும்பி வழியும் ஊக்கமிக்க ஓர் இளைஞனை எத்தகைய கட்டுப்பாடும் பாதிக்கமாட்டாது.

* * *

எல்லாக் கட்டுகளையும் அறுத்து நிற்கும் சுதந்தர வீரனை எது என் செயும். நாளென் செயும்? வினைதான் என்செயும்? தமைநாடி வந்த கோள் என்செயும்? கொடுங்கூற்று என் செயும்? "ஒருவர் செய்யவேண்டுமெனின் நாம் ஏன் செய்யவேண்டும்?" என்று உணர்விழந்த அடிமைப் புத்தியுடன் சாம்புவோர் முன் "ஒருவர் செய்யவேண்டுமெனின் நான் ஏன் செய்யக்கூடாது?" என்று மார்தட்டும் வீரன் உச்சிமீது வானிடிந்து வீழ்கின்றபோதிலும் அஞ்சுவனோ?

* * *

நச்சை வாயிலே கொணர்ந்து
நண்பரூட்டு போழ்திலும்
அச்சமில்லை அச்சமில்லை
அச்சமென்ப தில்லையே
பிச்சைவாங்கி உண்ணும் வாழ்க்கை
பெற்றுவிட்ட போதிலும்
அச்சமில்லை அச்சமில்லை
அச்சமென்ப தில்லையே
இச்செகத்துளோ ரெலாம்
எதிர்த்துநின்ற போதிலும்
அச்சமில்லை அச்சமில்லை
அச்சமென்ப தில்லையே.

என்ற பாரதியாரின் வீர முழக்கமன்றோ அவன் செய்வது?

* * *

நண்பரது இடையூற்றை வென்ற அவன் பகைவர்க்கஞ்சுவனோ? ஒருநாளும் அஞ்சான். அவனது சக்திவளர்ச்சி யுறுகிறது. அடுத்துப் பகைவரால் வரும் இடையூற்றையும் அவன் அநாயாசமாக வென்றுவிடுவான். பின்னர்த் தெய்வசோதனையாக வரும் இடையூற்றையும் அவன் கடந்தேதீர்வான்.

* * *

இவ்வாறு ஓர் இலக்கை நோக்கிச் செல்லும் ஒருவன் இடையில் தனது கொள்கையில் சில மாறுபாடுகள் செய்ய வேண்டிய அவசியம் நேரின் தயங்காது செய்தல் வேண்டும். முன் நினைத்தபடியே தான் செல்தல் வேண்டுமென்று பிடிவாதமாகப் போதல் கூடாது. அநாவசியமான மாறுபாடுகளும் செய்யக்கூடாது. எக்காலமும் தனது இலட்சியத்தையே சிந்தித்து

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்.
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்-செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயினார்"

என்றபடி அது நிறைவேறும்வரை எக்காரியமும் செய்யேன் என உறுதிகொண்டு அதிலேயே கண்ணுங் கருத்துமாயிருக்கவேண்டும்.

* * *

குறியும் செயலும் பற்றிய இவ்வுண்மையைக் கம்பர்பெருமான் குறிப்பாயுணர்த்துவது அறிந்து போற்றத்தக்கதாகும். ஆண்டகையாகிய அனுமன் கடலைத்தாவி இலங்கையை அடைவதற்குமுன் இலங்கையைப்பற்றி மனத்திலே ஒருபடம் எழுதிக்கொள்கிறான். மகேந்திர மலையினின்று விண்ணுட்டை அருகிற்கண்ட அனுமன் 'இதுதான் கடலாற் சூழப்பட்ட இலங்கையோ' என ஐயுறுகின்றான். இலங்கை கடலாற் சூழப்பட்டதெனும் உண்மை அனுமன் மனத்தில் நன்கு பதிந்திருந்தமையின் அது வானவர் நாடென அறிந்த உடனே அப்போக பூமியினின்றும் உள்ளத்தை மீட்டு, காணவேண்டிய கொள்கை அங்கு இல்லையெனத் தெளிந்தான்.

* * *

ஓர்குறியை நோக்கிச் செல்லும் ஒருவன் தன்னை வசீகரிக்கத்தக்க போகமும் அழகும் இன்பமும் பிறவும் எதிர்ப்படின் அதிலே மயங்கித் தனது இலட்சியத்தை மறத்தல் கூடாது என்னும் உண்மையைக் கம்பர்பெருமான் இதில் உணர்த்துகிறார். பிறகு அனுமன்,

"கண்டனன் இலங்கை மூதூர்க்
கடிபொழில் கனக நஞ்சில்
மண்டல மதிலும் கொற்றவாயிலும்
மணியிற் செய்த
வெண்டளக் கனகமாட வீதியும்
பிறவு மெல்லாம்
அண்டமுந்திசைக ளெட்டும் குலுங்கத்
தோள்கொட்டி யார்த்தான்"

இலங்கையின் காவலமைந்த சோலையும் பொன்மயமான கொத்தளமும் மதிலும் வெற்றியமைந்தவாயிலும் மணியாற்செய்து முத்துக்கள் பதிக்கப்பட்ட மாடமாளிகைகள்நிறைந்த வீதியும் பிறவும் அனுமன் கண் முன் எதிர்ப்படுகின்றன. தனது இலக்கையைக் கண்ணுற்ற அனுமன் சந்தோஷ ஆரவாரஞ் செய்கின்றான். மாமலையினின்றும் விடுபட்டு இலட்சியத்தைக் கண்ட வீரர் தன்னம்பிக்கையை அதிகப்படுத்த அவ்வாறே செய்வரன்றோ? ஊக்கத்தை வளர்க்க அதோடு பெரியாரின் ஆசீர்வாதமும் நண்பரின் எச்சரிக்கையும் சேர்கிறது. இமையவர், முனிவர் மற்றை முத்திரத்துலக்கத்தாரும் விரைவின் வந்து அனுமனை ஆசீர்வதிக்கின்றார். குறுமுனி குடித்த இக்கடலைத் தாவுதல் நமது சக்திக்கு மிக அற்பமானது என்று அலட்சியம் செய்யாது பெரிய காரியமாகவே மதித்து நீ செல்வாயாக என்று கம்பர் எச்சரிக்கை செய்கின்றார். ஓர் பெரிய காரியத்தில் தலையிட்டுக் கொண்டிருக்கும் ஒருவன் அலட்சிய புத்தியும் மிதமிஞ்சிய நம்பிக்கையும் கொள்தல் தவறேயன்றோ? காரியத்தைப் பெரிதாக மதித்து தன்னம்பிக்கையுடன் செயலாற்றல் அன்றோ அழகு? காரியசாதிகள் அனுமன் போன்று பெரியாரின் ஆசீர்வாதத்தையும் நண்பரின் எச்சரிக்கையையும் ஏற்றுக்கொண்டு வீண் பேச்சுப் பேசாது செயலிலேயே கருத்தாயிருப்பர்.

* * *

பின்னர் வீரன் கட்புலன் கதுவாவண்ணம் மேல் விசைத்தெழுந்தான். அனுமன் இவ்வாறு காற்றென ஏகும் காலையில் அவனது பழைய நண்பனான மைநாகம் என்னும் மலையானது எதிர்ப்பட்டு அங்கு தங்கிப் போகவேண்டுமென உபசரிக்க அனுமன் "மேலோனாகிய இராமன் அடியேன்மீது கைத்தகாதலினாலே அடியேற்கு யாதொரு வருத்தமுமில்லை. எனது இலட்சியத்தை நிறைவேற்றுவதன்றி யான் ஒன்றும் அருந்தேன். உனது இன்ப அன்பானது என்னைப் பிணித்தபோதே இருந்தேன்; நுகர்ந்தேன். இன்னமும் இனி நீ என் செய இருக்கிறது?" என்று கூறும் கருத்து அடியில்வரும் செய்யுளால் தெரியப்படும்.

திரு. மகாதேவ தேசாய் "இளமை இந்தியா"வின் உ०-ல०-உஎ-உ இதழில் எழுதியுள்ள வாரக்கடிதம் வருமாறு:—

இவ்வாரம் இன்னும் தெற்கே திருநெல்வேலி வரையில் சென்றோம். அங்கிருந்து கன்யாகுமரி, நாகர்கோவில் அடைந்தோம்; பின்னர் ஆலெப்பிக்குப் போனோம். திருவாங்கூரைப்பற்றித் தனியாகச் சொல்ல வேண்டும். தமிழ் நாட்டின் தெற்கேயுள்ள இப்பகுதிகளில் செய்யப் பெற்ற சுற்றுப்பிரயாணத்தில் விசேஷமான விஷயங்களில் ஒன்றைப் பற்றி, இடையிலேயே கூறுகிறேன்.

## இந்தி நிலைத்துவிட்டது.

இந்தி தெரிந்த சில நண்பர்களாவது இல்லாத இடமே தென்னிந்தியாவில் இல்லை என்று என்னுடைய முந்திய கடிதங்களில் நான் குறிப்பிட்டிருக்க வேண்டும். இந்திப்பிரசாரத்தொண்டர்களின் ஊக்கமான உழைப்புக்கு இது உரியதாகும். கும்பகோணம், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மதுரை, விருதுநகர், ராஜபாளையம் ஆகிய இடங்களில் இந்திப் பிரசாரத்தொண்டர்களைச் சந்தித்ததும், அவர்களது உழைப்பின் பலனைக் கண்டறிந்த உண்மையான திருப்தியைத் தந்தது. இந்தி தெரிந்த தொண்டர்களே எப்பொழுதும் மூதவின் எங்களை வந்திந்து, நாங்கள் வீட்டிலிருப்பது போலவே உணர்ச்சி கொள்ளுமாறு செய்தார்கள். ஐந்து அல்லது ஏழு ஆண்டுகளுக்கு முன், ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்திக்கு, டேசுவதற்கு இந்தி தெரிந்த ஒரு பெண்மணி கிடைக்காமல், அறிமுகமற்ற எங்கேயோ இருப்பது போன்ற உணர்வு கொள்ள நேர்ந்திருக்கும். ஆனால், இந்தச் சுற்றுப்பிரயாணத்திலோ, உண்மையிலேயே ஒவ்வொரு இடத்திலும், தம்மிடம் பேச ஏதோவொரு பெண்மணி அவருக்குக் கிடைத்தார். தூத்துக்குடியில், பொதுக் கூட்டத்தில், சிறுமிகள் இந்தியில் ஒரு பாட்டுப் பாடினார்கள்; பெண்கள் இந்தியில் ஒருவரவேற்புப் பத்திரம் படித்துக் கொடுத்தார்கள்; 'உண்மையான வைஷ்ணவன்' என்ற குஜராத்தித் தோத்திரக்கவியை, ஒரு சிறுமி இனிமையாகப் பாடினாள். இந்தி பாஷா அறிவு இன்னும் அதிகமாய்ப் பரவிப் போனால், திரு. ரங்கநாதன், லட்சுமிநாதன் போன்ற ஆங்கிலம் தெரியாத தொண்டர்கள் தமிழ் நாட்டைவிட்டுச் சென்று, மகாஜனங்களுக்கு இந்தியில் பிரசங்கம் செய்யலாம்; திரு. ராமஸ்வாமி நாயக்கர் போன்ற ஆங்கிலம்தெரியாத தமிழ்த் தொண்டர்கள் குஜராத்திற்குச் சென்று, மகாஜனங்களுக்கு இந்தியில் பிரசங்கம் செய்ய முடியும். இந்தியில் இன்னும் அதிகப் புலமை பெற்றால், வங்காளி, மராத்தி, குஜராத்தி போன்ற இந்தியாவின் பிற தேச பாஷைகளில் உள்ள இலக்கியங்களிலும் பரிச்சயம் பெறுவதும் தமிழர்களுக்கு எளிதாகும்.

---

"வெறுக்கேன் அது என் தவணைாளைகன்
வைத்த காதல்
அறுக்கேன் இனியாதும் என் ஆசை
நிரப்பி யல்லால்
பொறுக்கேன் பிழைாலும் நின்தன்பு
பிணைத்த போதே
நிறுக்கேன் நுகர்க்கேன் நிகல் பேலினி
நவதுண்ட"
தன் புட் டணியவற்றவார்க்கு வருத்தமேது?
தன் ஊர்க்குத்தமது இலட்சியம் நிறைவேறும்
வரை வேறொன்றும் சிந்தையை செலுமோ?

* * *

"இலங்கை வெற்றி அன்றுஆண்டான் அடியைத் தொழில் ஆற்றி மீண்டு உன் நல் விழிர்து நான் நுகர்வேன்" என வேண்டி அனுமன் தெய்வ சோதனையாகவும் பகைவர் ஊர்க்கும் இடையூறுகளை வெல்லாம் வென்று சென்றான். மதிலிலே தங்க வேண்டுமென முன்னர்த் தீர்மானித்து வந்த அனுமன் அன்குத்தம் நோக்கமில்லாதவனாய் மிகவும் அவ்விலங்கை முதூரின் பகஞ்சுடர்ச் சோலையினுள்ள ஓர் பவளமாக் வரையில் தாக்கிநான். இதனால் நமது ஊரில் சில காரியங்கள் செய்யவேண்டிய ரகசியம் சேரன் செய்தல் வேண்டும் என்னும் உண்மை வெளிப்படுதல் காணலாம். இப்பொழுதை முறையாக அழுகுடன் ஊட்டாலுணர்ந்தும் கப்பர் பெருமாள் மனித நிலைகளைய எவ்வளவு அறிந்தவரென்பதும் எத்துணை மதிநலமும் உலக அனுபவமும் செறிந்தரெனும் உடையவரென்பதும் நன்கு அறியப்படும்.

---

# திருவாங்கூரில்.

## குறிப்பிடத்தக்க ஒரு முயற்சி.

இந்தப் பகுதிகளில் கதர்வேலை மிகுதியும் காணப்படவில்லை; பிராம்மண-பிராம்மணரல்லாதார் விவாதம் நிர்மாணவேலை எதற்கும் இடமில்லாமல் செய்திருக்கிறது. என்றாலும் இந்தி இயக்கத்தில் நம்பிக்கையும், இதற்காக ஊக்கங்கொண்ட உழைப்பும் தோன்றும் சில உதாரணங்களாவது ஒவ்வொரு இடத்திலும் காணப்படுகின்றன. காக்கனேரியில் திரு. குப்தா அவர்கள் நூறு இராட்டைகளையும் இருபத்தைந்து தறிகளையும் வைத்து, கதர் உற்பத்தி செய்துவருகிறார். இந்த வேலையை மிகவும் அபிவிருத்தி செய்வதாக, அவர் வாக்களித்திருக்கிறார். நூற்றொரு ரூபாய் கொண்ட பணமுடிப்பு ஒன்றை அவர் சமர்ப்பித்தார். அவரது சிறிய கிராமம், மேலும் ௰० ரூபாய் அளித்தது. திருநெல்வேலிக்குச் சில மைல் தூரத்தில் குலசேகரப்பட்டினம் என்ற ஒரு ஊர் இருக்கிறது. சர்க்கார் உதவிபெற்ற ஆண் பள்ளிக்கூடமொன்றும், பெண் பள்ளிக்கூடம் ஒன்றும் அங்கே இருக்கின்றன. திரு. அரம்வளர்த்தநாதபிள்ளை அவர்களின் தன்னலத் தியாகங்கொண்ட உழைப்பினால், அந்தப் பிரதேசம் முழுவதும் அவை கீர்த்திபெற்றிருக்கின்றன. ௧௦० பேருக்கு மேற்பட்ட பிள்ளைகளும் சில பெண்களும் தகலியில் நூல் நூற்றுக் கொண்டிருக்கிறார்கள். தாங்கள் நூற்பது கட்டாயமான அரைமணி நேரத்தில் மட்டுமல்ல, தாங்கள் விளையாடத் தனிக்கப்பெற்ற நேரத்தில்கூட, அவர்கள் நூற்கிறார்கள். தாங்கள் தக்லியில் ஐந்து மாதத்தில் நூற்ற நூலைக்கொண்டு நெய்யப் பெற்ற அங்கவஸ்த்ரத் துண்டை எடுத்துக்கொண்டு, திரு பிள்ளை அவர்கள் பிரத்யேகமாய் வந்தார். திரு. விசுவநாதபிள்ளை என்டவருக்கு நூற்கவும் நெய்யவும் தெரியும். பிள்ளைகளிடம் அவர் கூர்ந்த சிரத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார். அவர் இந்தப் பள்ளிக்கூடங்களுக்கு அடிக்கடி விஜயம் செய்து, மேற்பார்வையிடுவதுடன், பரிட்சார்த்தமான முயற்சிகளில் வழிகாட்டியும் கொடுக்கிறார். பாளையங்கோட்டையும் திருநெல்வேலியும் பெரிய முனிசிபல் நகரங்கள். அவை அளித்த பணமுடிப்புகள் அவற்றின் பெருமைக்குத் தகுந்தவையல்ல. என்றாலும், கவியையும், காந்தியடிகளால் வைக்கப் போடப் பெற்ற தக்லித் தண்டுகளின் அழகையும் பாராட்டத்தக்க ஜனங்கள் கூட்டத்திலிருந்ததையும், அவர்கள் அவற்றை நன்றாக வைத்தில் கேட்டார்களென்பதையும் மகிழ்ச்சியுடன் கூறுகிறேன்.

## சீட்டுகள் வைத்து உள்ளேவிடல்.

திருவனந்தபுரத்தில் பெண்மணிகள் ஒரு கூட்டம் கூட்டியிருந்தார்கள். 'டிக்கட்'கள் மூலம் உள்ளேவிட அதில் ஏற்பாடு செய்யப்பெற்றிருந்தது. 'டிக்கட்' வாங்க முடியாதவர்கள் உள்ளேவிடப்படவில்லை. அவர்களது காரியதரிசியிடமிருந்து, காந்தியடிகள் இதைக்கண்டு கொண்டார். தங்கள் 'டிக்கட்'களுக்கு ஏற்கனவே பணம் கொடுத்துவிட்டதால், அதற்கு மேல் பின்னும் பணங் கொடுக்கத் தங்களுக்குச் சக்தியில்லை என்று, காரியதரிசி காந்தியடிகளிடம் விளக்கினார். இதைக் கேட்டதும், தாம் வருந்துவதாகவும், எந்தப்பெண்ணாவது ஒதுக்கப்பெற்றிருப்பதற்குத் தாம் வருத்தமெய்துவதாகவும், காந்தியடிகள் கூறினார். அவர் கூறியதாவது;—"பணங் கொடுக்கச் சக்தியற்றவர்களை, என்னது செய்தியைக் கேட்கமுடியாதபடி தடுக்கவேண்டுமா? யாவரும் இலவசமாக உள்ளேவர அனுமதித்திருந்து, காலணாவும் பெறாமல் நான் போகவேண்டிவந்திருந்தாலும், நான் பூர்த்தியான மகிழ்ச்சியுடனேயே சென்றிருப்பேன். மிருகக்காட்சிச் சாலையின் விலங்கு ஒன்றைக்காண்பதற்கான கட்டணத்தைச் செலுத்திவிட்டு, நீங்கள் இங்குவந்து சேர்ந்தது என்பதைக் கேட்க, நான் வருந்துகிறேன். ஒரு தமாஷ்ப் பொருளைப் பார்க்கவா? அப்படியாயின், நீங்கள் உங்களுக்கான பிரதிபலனைப் பெற்றுவிட்டது. ஆனால், தரித்திர நாராயணனது இயக்கத்தில் உங்களுக்கு ஏதும் அனுதாபம் உண்டாயின், எனக்கு அளிக்கப்பெற்ற எச்சரிக்கையையும் மீறி, உங்களால் முடிந்ததை அளியுங்கள் என நான் உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். 'டிக்கட்'களைக் கொண்டு வசூலிக்கப்பெற்ற பணத்தைவிட, உங்கள் சுயேச்சையான விருப்பத்துடன் காலணாக் கொடுக்கப்பெற்றாலும் அதை அதிகமாய் மதிப்பேன்." காரியதரிசிகள் பணம் வசூலிக்கச் சென்ற பொழுது, தயங்கிக் கொண்டே சென்றார்கள். ஆனால், பலன் அதிசயிக்கத் தாயிருந்தது. பணப்பைகளைக் காலி செய்ததுமட்டிலுமல்ல, ஆனால் கழுத்தணிகளையும் மோதிரங்களையும் கழட்டிக் கொடுத்துவிட்டார்கள். அவர்கள் வேடிக்கை பார்க்கவரவில்லை, உண்மையான அனுதாபத்தினாலேயே வந்தார்கள் என்பதை இது விளக்கமாய்க் காட்டியது.

## திருவாங்கூரில்.

ஆனால், திருவாங்கூர் விஜயத்தில் முக்கியமானதாகப் போன ஒரு விஷயத்திற்கு நான் இப்பொழுது வரவேண்டும். பங்களூரில், திருவாங்கூர்க்காரரான ஒரு நண்பரிடம் காந்தியடிகள் "திருவாங்கூர்க்காரர்களுக்கு எதிரிடையாக, நான் ஒரு நாள் சத்தியாக்கிரகம் செய்ய வேண்டிவரும்" என்று வேடிக்கையாகக்கூறி, உரைத்ததாவது:—"இந்தியாவிற்குக் கதர் உடுத்தமுடியவில்லை என்று கொஞ்சம்கூடச் சாக்குக் கூற முடியாதவர்கள் நீங்களே. நீங்கள் உடுத்திக் கொள்ளுவதற்கு மிகக் கொஞ்சம் துணியே உங்களுக்குத்தேவை. கறைகளற்ற சிறிய வெள்ளைத் துணியை மேலாக்காக, உங்கள் பெண்கள் போர்த்துக் கொள்ளுகிறார்கள். இந்தியாவின் ஏனைய பகுதியிலுள்ள பெண்கள் கொண்டிருக்கும் வர்ணப் பைத்தியம் எதுவும் உங்கள் பெண்களுக்குக் கிடையாது. நீங்கள் கதர் உடுத்தாவிட்டால், உங்களுக்கு விரோதமாக, நான் சத்தியாக்கிரகம் செய்ய வேண்டாமா?" திருவாங்கூர் வாசிகளை, இவ்வாறு அன்பினால் பயமுறுத்துவதற்காகவே, தற்பொழுதைய கதர்ச் சுற்றுப்பிரயாணத்தில், திருவாங்கூருட் புகுந்து செல்ல, காந்தியடிகள் இசைந்தார். ஆனால், அவர் திருவாங்கூர் போய்ச்சேருமுன்னரே, அவருக்காக அங்கு காத்துக் கொண்டிருந்த வேலையைப்பற்றி முன்னறிவிப்பு கிடைத்துவிட்டது. சமஸ்தானத்தின் போலீஸ் கமிஷனர், நாகர்கோவிலில் அவரைச் சந்தித்து, மறுபடியும் சத்தியாக்கிரகம் செய்யப் போவதாகச்சொல்லப்படுவதுபற்றி, தற்பொழுதைய நிலைமையைக் குறித்து அவரிடம் விவாதித்து, அவருடைய ஒத்தாசையை வேண்டினார். திருவனந்தபுரம் போய்ச் சேர்ந்ததும், அவர் மகாராணியைப் பேட்டி கண்டார்; திவானைச் சந்தித்தார்; தேவாசவம் கமிஷனரைப்பார்த்தார். பின்னால், ஈழுவத் தொண்டர்களில் முக்கியஸ்தரைச் சந்தித்தார். திருவாங்கூரில் நான்கு இடங்களில் நிகழ்த்தியசொற்பொழிவுகள் முழுவதிலும், பரபரப்பைஉண்டாக்கியுள்ள இந்த விஷயத்தைக் குறித்தே பேசினார். சமஸ்தானத்திற்கும், மேல் வகுப்பு இந்துக்களுக்கும், 'தீண்டப்படாதோருக்கு'மான செய்திகள் அவற்றில் அடங்கியுள்ளன. அவரால் மாத்திரமே முடிவதான அன்புடனும், உருக்கத்துடனும் உணர்ச்சியுடனும் அவை கூறப்பட்டன. எனினும், அவை, நிலைமையை அவர்பொறுமையுடன் ஆராய்ச்சி செய்ததனின்றும் மட்டுமே கிடைக்கக் கூடிய அறிவுடனும் ஆழ்ந்து யோசித்து எச்சரிக்கையுடன் விடுவிக்கப்பெற்றன.

திருவாங்கூரின் நிலைமை ஒரு விடுகதை போன்றது. நாடு யனைதக் கவரச் செய்யும் அழகு வாய்ந்திருக்கிறது. கல்வி, சாலைகள், சுகாதாரம் ஆகிய விஷயங்களில் சமஸ்தானம் முன்னேற்றமடைந்திருக்கிறது. இவற்றில், இந்தியாவிலுள்ள சமஸ்தானங்கள்யாவற்றிலும் முதன்மைப்பதவியை அது பெற்றிருக்கிறது. அது புராதனமான ஒரு இந்து சமஸ்தானமென்பதும், இந்துக்களின் கல்விக்கு ஒரு நிலையமாக அது இருக்கிறது என்பதும், பார்க்க வருவோரில் எச்சரிக்கையற்ற ஒருவரை அதன் சில இருண்கொண்ட அம்சங்களைக் காணமுடியாதபடி பொட்டையாக்கிவிடக் கூடியவாறு ஒளி செய்கின்றன. முன்னேற்றம் எய்துவதில் ஆர்வம் கொண்டிருப்பதாக அது காணப்பட்டாலும், அதன் ஜனத்தொகையில் ஏறக்குறையப்பாதிப் பேரைத் 'தீண்டப்படாதோர்' என்று அது வகுத்திருக்கிறது. அவர்கள் இந்தியாவிலுள்ள 'தீண்டப்படாதோர்' யாவரினும் மிகுந்த நாகரிகமும், மிகுந்த செல்வமும் பெற்றவர்கள். எனினும் சமஸ்தானத்தில், மிகக் கேவலமான உரிமைக்குறைவினால், அவர்கள் வருந்துகிறார்கள். இந்து மதத்தைப்பரவச் செய்ய ஸ்ரீ சங்கராச்சாரியர் இந்தியாவுக்கு அளித்த இந்த சமஸ்தானம், இன்று, இந்துமதத்தின் மிகக்கேவலமான சில உருவங்களை காட்டிக்கொண்டு கொண்டிருக்கிறது.

"இங்கு எக் காட்சியும் இன்பமளிக்கின்[றது;
மனிதன் மட்டுமே, கொடியனாயிருக்[கின்றான்"

என்று, இவ்விடத்தைக் குறித்து பிஷப் ஹீபர் என்பவர் போன்ற, பகைமையும் பரிகாசமும் கொண்ட ஒரு ஆராய்ச்சிக்காரர் பாடியிருப்பதில், கொஞ்சம் உண்மையில்லாமலில்லை. காந்தியடிகள் வருத்தத்துடன் கூறியதாவது:—"இவ்வளவு அழகும், இவ்வளவு இனிமையும் கொண்டிருக்கும் ஒரு இடத்தில், மனிதனுக்கு விரோதமாக மனிதன் அன்பற்றிருப்பது, எனக்கு ஆழ்ந்த வருத்தம் தரும் ஒருவிஷயமாக இருக்கிறது, இருந்தது. இந்த சமஸ்தானத்தில் இந்து மதம் எப்படி வெளிக்குக் காணப்படுகிறதோ, அதைக்கொண்டே இந்துமதத்தை அளக்க வெளியுலகத்திற்கு உரிமையுண்டு. தீண்டாமை விஷயத்தில் இந்த சமஸ்தானத்தின் நிலைமை பெருமைதருவதன்று. இது இந்துமதத்திற்கே துரதிருஷ்டமாகும்; இந்த சமஸ்தானத்திற்கே துரதிருஷ்டமாகும்; இந்தியா முழுமைக்கும்கூடத் துரதிருஷ்டமாகும்."

"என்றாலும், இந்த சமஸ்தான வாசிகளான இந்துக்களால் ஆரிக்கப்பட்டாலன்றி, ஊக்கத்துடன் ஆதரிக்கப்பட்டாலன்றி, இந்தத்தீமையை ஒழித்து விடுவது, இந்த சமஸ்தானத்திற்கும்கூட அசாத்தியமாகும்" என்று காந்தியடிகள் உணர்ச்சி சொன்னார். "அதன் சொந்த ஜனங்களால் இந்த சமஸ்தானம் தடுக்கப்பட்டாலுமன்றி" என்றும் அவர் சேர்த்திருக்கலாம். சிறிது காலத்திற்கு முன் வரையில் இந்து வல்லாத ஒரு திவானைப் பெற்றிருந்ததென்பது இந்த சமஸ்தானத்தில் நினைக்கவும் கூடாததாயிருந்து வந்தது. அதன் திவான்களில் மிக உயர்ந்தவரான சர் டி. மாதவராவ் அவர்கள் 'ஒவ்வொரு பிரஜைக்கும், சில மணிநேரம் பிரயாணம் செய்யும் தூரத்திற்குள் ஒரு டாக்டரையும், ஒரு பள்ளிக்கூட உபாத்யாயரையும், ஒரு ஜட்ஜியையும், ஒரு மாஜிஸ்டிரேட்டையும், பத்திரப்பதிவு உத்தியோகஸ்தரையும், ஒரு போஸ்ட்மாஸ்டரையும் நாடக்கூடிய வசதிகளை' அமைத்துக் கொடுத்திருக்கிறார். அவர்கூடத் தமது சமஸ்தானத்தின் 'தீண்டப்படாத' பிரஜைகளை மறந்துவிட்டார். தந்தத்தால் மனித எலும்புக்கூடுபோல் செய்யப்பெற்ற ஒரு கூடு சமஸ்தானப் பொருட்காட்சிசாலையில் வைக்கப்பெற்றிருக்கிறது. திருவாங்கூர் அரசர்களில் ௨௦ வயது வாழ்ந்தவர்களில் ஒருவரான ராஜா மார்த்தாண்டா வர்மாவுக்காக அது விசேஷமாய்த் தயாரிக்கப்பெற்றது. மனித உடலமைப்பைப்பற்றி ஆராய்ச்சி செய்ய அவர் விரும்பினார். ஆனால், எலும்புகளைத்தொடக்கூடாதென்றவரது ஹிந்துமதக் கொள்கை அவரைத் தடுத்து விட்டது. பின்னால் வந்த ஒரு ராஜாவின் கதையை ராபர்ட்ஸ் பிரபு கூறுகிறார். அந்த ராஜா "ராபர்ட்ஸ் பிரபுவின் மனைவியைக் கையைப்பிடித்து ஒரு விருந்திற்கு அழைத்துச் சென்று திருப்பிக்கொண்டுவந்து விட்டார்" என்ற காரணத்திற்காக, பிராமணர்களால் ஒரு கடுமையான பிராயச்சித்தம் செய்விக்கப்பெற்றார். குறிப்பிட்ட சில சமூகத்துப் பெண்கள் எந்தத் துணியையும் மார்புக்குமேல் அணிந்துகொள்ளக்கூடாது என்று சில ஆண்டுகளுக்கு முன்வரையில் இந்த சமஸ்தானத்தில் தடுக்கப் பெற்றிருந்தார்கள். ஒரு கேவலமான வழக்கத்தை இந்த சமஸ்தானம் எவ்வளவு தூரம் சகித்துக்கொள்ளக்கூடியது என்பதை அது காட்டுகிறது. இந்த நிலைமையில், மகாராணி ரீஜண்ட் அவர்கள் தாம் ஒரு சீர்திருத்தக்காரர் என்பது மட்டிலுமன்று, தம்மால் முடிந்தமட்டில் சீக்கிரத்தில் இந்தக் கொடுமையை ஒழிக்கவும் ஆவல் கொண்டிருப்பதாகவும்கூட, காந்தியடிகளுக்கு உறுதி கூறினார். இது அற்பமான சங்கதியன்று.

(கஉ-ம் பக்கம் பார்க்க.)



"இளமை இந்தியா"வின் கஉ-ல०-உஎ-இதழில் திரு. மகாதேவ தேசாய் அவர் எழுதியுள்ளவாரக்கடிதம் வருமாறு:—

## மதுரை.

இந்தவாரத்தில், இன்னும் தெற்கே, மதுரை, ராமனதபுரம், திருநெல்வேலி அடங்க, தூத்துக்குடிவரையில் சென்றோம். மதுரைக்கு விஜயம் செய்த பொழுது, காந்தியடிகளுக்கு இரண்டு புனிதமான விஷயங்கள் ஞாபகத்துக்கு வந்தன. அவருடைய 'நண்பரும், கூடவுழைத்த தோழருமான மௌலானா முகம்மதலி' வால்டேரில் அவரிடமிருந்து பிரிக்கப்பெற்றவகையும், ஆறு ஆண்டுகளுக்கு முன் காந்தியடிகள் மதுரைக்குச் சென்ற பொழுது மௌலானா கூடவிராமையைக் கண்டு ஒவ்வொருவரும் மனமுருகியதும், காந்தியடிகள் இப்பொழுது உடுத்திக்கொண்டிருக்கும் இப்புத்துணியை உடுத்திக் கொள்ளுவதைப் பகிரங்கமாய்க் கைக்கொண்டது எந்த சந்தர்ப்பங்களோ அவையுமாகும் அவ்விஷயங்கள். ஆனால், ஜனங்களின் ஞாபகம், அதுவும் பரஸ்பர நாசத்தைத்தரும் சச்சரவுகள் நிறைந்த இந்தக் காலத்தில், குறைந்திருப்பதாகக் காணப்படுகிறது. ஒரு காலத்தில் ஒற்றுமையை உண்டாக்கி, பெருந்தன்மையை அளித்து, உயர்ந்த குணத்தையடைவித்து, தியாகங்களைச் செய்யத்தூண்டிய விஷயங்களெல்லாம் இப்பொழுது மறந்துவிடப்படுகின்றன; சண்டைக்கான விஷயங்கள் மேல் தூக்கி நிற்கின்றன.

ஆனால், புயல் அடித்துக் கொண்டிருக்கும் பொழுதும் மனக்கொதிப்படையாது அமைதியுடனிருக்கும் ஆன்மாக்களும், கடவுளருளால் எப்பொழுதுமிருந்து வருகின்றனர். தங்களைச்சுற்றியுள்ள நிலைமையை அடக்க முடியாவிட்டால், அவர்கள் ஆத்திரமின்றி, ஓய்வின்றி, மௌனமாக உழைக்கின்றார்கள். எனக்குத் தெரிந்த மட்டில், அத்தகைய சில ஆன்மாக்களையாவது பெற்றிருக்கும் பாக்கியம் மதுரைக்கு உள்ளது. அத்தகைய உழைப்பாளிகளைக் கொண்ட எந்த இடமும் சோர்வு கொள்ள வேண்டியதில்லை. திரு. வைத்தியநாதய்யர் தமது வக்கீல் தொழிலை விட்டுவிட்டு, மூன்று ஆண்டுடன் (தேசியப்) போராட்டத்தில் கலந்து கொண்டார். நிர்ப்பந்தம் ஏற்பட்டு மறுபடியும் தமது தொழிலுக்குத் திரும்பிவிட்டார். ஆனாலும், இன்னும் கொடியைப் பறக்கவிட்டுக் கொண்டிருக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறார். சர்க்கா சங்கத்தில், அவர் ஒரு அங்கத்தினர்; கதர் இயக்கத்தில் கூர்ந்த சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார். எனினும், சர்க்கா சங்க அங்கத்தினருள் மிக ஊக்கத்துடன் உழைப்பவர் திரு. வேதராம அய்யர். தென்னிந்திய வக்கீல்களில் மிகப்பிரபலமடைந்தவருள் ஒருவர் இவர். கோர்ட்டுக்கு வெளியிலிருக்கும் நேரங்களில், அநேகமாக நூல் நூற்றுக் கொண்டிருக்கக் காணப்படுகிறார். சென்னைத் தொகைக்கு அடுத்தபடியானது மதுரையின் பணமுடிப்பேயாகும். அவ்வாறிருக்குமாறுசெய்ய, இரவும் பகலும் உழைத்தவர் இவரே. சர்க்கா சங்கத்தை உயிர்கொண்டிலகுமாறு செய்ய, நேரத்தையும் சக்தியையும் இவர் முடிந்தமட்டில் செலவிடுகிறார். "அங்கத்தினர் தங்களது நூற்சந்தாவை ஒழுங்காகச் செலுத்துமாறுபார்த்துக் கொள்ளுவதற்காக, காரியஸ்தர் எவரையேனும் மத்தியச் சங்கம் ஏன் அமர்த்திக் கொள்ளவில்லை? அத்தகைய காரியஸ்தர் எவருமில்லாததனால், எனது நண்பர் திரு. வைத்தியநாத அய்யரைப் போன்றோருங் கூடப் பாக்கி வைத்துக் கொண்டிருக்கிறார்களே!" "இது, அவருக்குக் கஷ்டமாக இருந்தது; காந்தியடிகள் மீது அவர் வணக்கத்துடன் செய்து கொண்ட புகாருமாகும் இது. காந்தியடிகள் கூறியதாவது:—"இந்தக் குற்றத்தை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், சங்கம் வேறு நோக்கில் கருதியிருக்கிறது. அதை நான் உங்களுக்கு விளக்குகிறேன். பசியால் வாடும் கோடிக்கணக்கான மனிதர்கள் மீது, அதாவது, அவர்கள் யாவரையும் நூற்போராகச் செய்வதில், நாம் ஆயிரக்கணக்கான ரூபாய்களைச் செலவழிக்கலாம். ஆனால், தாமாய் நூற்றலை முற்போக்கடையச்செய்வதற்காக, காரியஸ்தர்களை அமர்த்திக் கொள்வதில் நாம் ஒரே ஒரு காலணா வைக்கூடச் செலவிடலாகாது. தாமாய் நூற்க முன்வருவோராக, சங்கத்தைச்சேர தாமாக முன்வரும் எந்தக் காரியஸ்தர்களையும் நான் வேண்டாமென்று தள்ளவில்லை. உதாரணமாக, உங்களுக்கு விருப்பமான வரையில் உங்கள் நண்பர்களைத் தூண்ட, நீங்கள் முயலலாம். சங்கத்தின் உறுப்பினரை அதிகப்படுத்துவதும், ஒவ்வொரு அங்கத்தினரும் தமது சந்தாவை ஒழுங்காகச் செலுத்துமாறு செய்தலும், உண்மையிலே, நூற்போர் சங்கத்தின் ஒவ்வொரு அங்கத்தினருடையவும் கடமையாகும். உங்களைப்போன்ற வக்கீல்களுக்கு அதாவது இவ்விபக்கத்தில் நம்பிக்கை உடையவர்களுக்கு, அது மிக எளிதில் முடிந்த காரியமாகும்'

ங்க கொள்வோர், நூற்றலை ஒரு தியாகமாகக் கைக்கொண்டுநூற்கிறார்கள். வெளிச்சுண்டுதல் தேவையான தியாகம் தியாகமே அல்ல. அசட்டை மேற்கொண்டோர் இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன்; நமது பாக்கிதார்களின் ஜாபிதா சுமந்து கிடக்கிறது என்பது எனக்குத் தெரியும். ஆனாலும், அவர்களை எழுப்ப, காரியஸ்தரெவரையும் நான் அமர்த்திக் கொள்ளமாட்டேன். தங்களைச் சுற்றியுள்ளவர்களெல்லாம் சோர்ந்து கிடப்பினும், தங்கள் தியாகத்தை ஒழுங்காகச் செய்து கொண்டே வந்து, தங்கள் தாய் நாட்டிற்குத் தங்கள் சந்தாவைச் செலுத்திக் கொண்டே வருவோர் தேசீய இயக்கத்தின் உப்பாக (அதை ஆரோக்கியம் கொண்டதாக வைத்துவரும் செல்வாக்குடையோராக) இருப்பார்கள். நானும் இந்த இயக்கமும் கூடப்போயினும், அவர்கள் தங்கள் வேலையைச் செய்து கொண்டேயிருப்பார்கள். ஆனால், இந்த வேலையை உங்கள் குமாஸ்தாவிடம் ஒப்படைத்து, அவரை, எட்டிலே பத்திலே ஒவ்வொரு அங்கத்தினரிடமும் சென்று, அவர்களது சந்தாக்களை வசூலிப்பதுடன், அவர்கள் பாக்கிவைத்திருந்தால் அவர்களுக்கு அதை ஞாபகப்படுத்தவும் சொல்லுவது உங்களால் முடியும். தென்னாப்பிரிக்காவிலே, காங்கிரஸ் வேலையின் பெரும்பாகத்தையும் எனது குமாஸ்தாக்களைச் செய்யச் செய்து வந்தேன். நான் விநோத மனப்பான்மை கொண்டவன் என்பதனால் அதைச் செய்தேன் என்பதன்று. பொது ஜனத் தொண்டில் ஊக்கங்கொண்ட ஒவ்வொரு வக்கீலும், அதில் தமக்குரிய நியாயமான பங்கைச் செய்யவேண்டும். உதாரணமாக, அங்கே யுத்தம் நிகழ்ந்த பொழுது போர்முனைக்குச் செல்லுவதற்காக, பிரபல வக்கீல் ஒவ்வொருவரும் தமது தொழிலை விட்டுவிட்டார்கள். நான் பின்னும் சுணங்கிக் கொண்டிருந்ததைக் கண்ட மாஜிஸ்டிரேட்டின் கண்களில் கோபத்தை நான் கண்டேன். வெறும் வெட்கம் உண்டானதனாலேயே, எனது தொழிலைப் பின்னும் நடத்திச் செல்லுவது எனக்கு அசாத்தியமாயிற்று என்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். எனது வக்கீல் பதவி அந்தஸ்தைக் காத்துக் கொள்ள வேண்டுமானால், நானும் செல்ல வேண்டும் என்று நான் உணர்ச்சி கொண்டேன்."

திரு. வேதராம அய்யர் தமது படிப்பைக் குறித்துச் சிறிதும் படாடோபம் செய்யாத, களங்கமற்ற மனிதர். மதுரைக்கு அப்பால், அவர் ஓரிரு இடங்களுக்கு எங்களைத் தொடர்ந்து வந்தார். அவர் ஒரு பொழுதும் காந்தியடிகள் மேல் வந்து விழவில்லை. ஒவ்வொரு கூட்டத்திலும் கூடியிருந்த ஜனங்களுக்கிடையே, அவர் அமர்ந்திருந்தார். ஒவ்வொரு சிறு பொருளையும் ஏலத்தில் கேட்டு, ஏலங்களில் உற்சாகமேற்படுத்தி வந்தார். அவர் மாதிரி மனிதர்களை "இயக்கத்தின் உப்பு" என்று காந்தியடிகள் விவரித்தது நியாயமேயாகும்.

இப்பதத் தொடர் இன்னொர் களங்கமற்ற ஆன்மாவை—திரு. ஜோஸப் அவர்களின் உயரிய வாழ்க்கைத்துணைவியை—உடனே எனது ஞாபகத்திற்குக் கொண்டுவருகிறது. அவர்களிருவரிடமும் நான் கொண்டிருக்கும் நட்பைநோக்க, அவரை (திரு. ஜோஸப்பின் மனைவியை)க் குறித்துப் பேசும் பொழுது சிறிது தயக்கம் உண்டாகிறது. நூல் நூற்றலிலும் கதரிலும் திரு. ஜோஸப் இன்னும் கொண்டிருக்கும் ஊக்கமெதற்கும் பொறுப்பாளி அவரது மனைவியே என்று நான் கூறுவேனாயின், திரு. ஜோஸப் ஆட்சேபிக்க மாட்டார் என்று கருதுகிறேன். பொது ஜனங்களுடைய பணமுடிப்புக்காக திரு. வேதராமய்யர் எவ்வளவு உழைத்தாரோ அவ்வளவு, பெண்களின் பணமுடிப்புக்காக ஜோஸப்பின் மனைவி உழைத்தார். இந்த மாகாணத்தின் பெண்கள் பணமுடிப்புகள் யாவற்றினும், இதுவே பெரிதாகும். ஆனால், இது அவர் செய்த வேலையில் மிகச் சிறு பகுதியேயாகும். பெண்களிடையே நூற்றல் பிரசாரத்தைச் செய்வதில், அவர் கூர்ந்த சிரத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார். அவ்விதம் செய்வதனால், மிக எளியவர்களிடமும், மிகத்தாழ்ந்தவர்களிடமும், மீனாக்ஷியை எய்தியவர்களிடமும் அவர் நட்புக் கொண்டிருக்கிறார். தொழிலாளர் வகுப்புப் பெண்மணிகள் நாகரிக வாழ்வின் இன்பங்களை அனுபவிக்கவும், தங்களைவிட அதிக அதிர்ஷ்டம் வாய்ந்த தங்கள் சகோதரிகளுடன் நெருங்கிப்பழகவும் கூடியவாறு செய்வதற்காக, சங்கங்களையும் கலைகள் போதிக்கும் வகுப்புகளையும் கன்னி எல்லன் ஷீ என்பவர் நடத்திவருகிறார். அவர் சுவீடன் தேசத்தைச் சேர்ந்த, மேலான சீர்திருத்தக்காரர் ஜோஸப்பின் மனைவியவர்கள் தொழிலாளர் வகுப்பினரிடம் தமது உழைப்பை நிறுத்தவில்லையாதலின், அவர் இன்னும் அதிக வேலை செய்வதில் பலன் பெற்றிருக்கிறார். அவர் தமது சகோதரிகளுள் மிகத்துரதிர்ஷ்டவதிகளான தேவதாசிகளை இழுத்து, அவர்களிற் சிலரைச் சீர்திருத்தி, தமது சங்கத்தின் அங்கத்தினராகச் சேர்த்துக் கொண்டிருக்கிறார். இன்னும் விசேஷம் யாதெனில், மேல் வகுப்புச்சீமாட்டிகள் அவர்களுடன் கூடியுழைக்கவும், அவர்களது நல அபிவிருத்தியில் ஊக்கங்கொள்ளவும் செய்திருக்கிறார். என்றாலும், அவர் பற்றியமட்டில், அவரது வலதுகை தளிப்பதை அவரது இடதுகை அறிவதில்லை. உண்மையான தர்மம் நிற்கு மிக உண்மையான உதாரணங்களாக விளங்குவோரில் திரு. ஜோஸப்பின் மனைவி ஒருவராவர்.

மேலும், விளக்கை (அணையாது) எரிய விட்டுக்கொண்டிருக்கும் இத்தகைய பே[illegible]

(௧௨-ம் பக்கம் பார்க்க.)

---

# துணித் துறவு.

## திருவாளர்——அவர்கள்.

அரசியலில் கூர்ந்த சிரத்தையே. பத்திரிகை படிப்பதில் தவறுவதில்லை; ஒரு பக்கங்கூட விடுவதில்லை; "பெரிய மனிதர்க"ளிடையில்தான் பழக்கம். அவருக்கு அரசியல் சம்பந்தப்பட்டமட்டில் தனித்த அபிப்பிராயங்கள் உண்டு. என்றாலும், "நாகரிகம்" இருக்கிறதல்லவா? எனவே, தலைப்பாகை, கோட், ஷர்ட், டை, உட்சட்டை, காற்சட்டை, பூட்சு முதலியவற்றில் குறைவில்லை. அதிலும் யாவும் உயர்ந்த தினுசு அன்னியத் துணிகளாலேயே ஆனவை.

## அவர்தான்.

அரசியற் பைத்தியம் சும்மாப் போகுமா? அரசியலின் உயிர்போன்ற ஒரு அம்சம் அரசியல் வாதியைப் பற்றாது விடுமா? கதர் வந்தது. மேடைப் பேச்சுக்காவது அது தேவையல்லவா? கதர் இயக்கம் உயிர்த்தன்மை பெற்று விட்டதன்றோ? அதற்கு எப்படித் தப்பமுடியும்? உள்ளத்துடனே தானோ, வெளிக்குத்தானோ, எப்படியாயினும் அரசியலுக்குக் கதர் தேவையாய் விட்டது. எனினும், அலங்காரம் வேண்டாமா?

## அவரேதான்.

மாற்றம் என்பது இயற்கையின் விதி. மனிதனும் அதற்கு ஆட்பட்டவனே. உள்ளுக்கும் வெளிக்கும் நாண் ஏற்படின், வெற்றி எதற்கோ அது மற்றதையும் மாற்றுகிறது. மேலுக்கு ஏற்ப உள் மாறிற்றோ, உள்ளுக்கு ஏற்ப வெளிதான்மாறிற்றோ; எப்படியாயினும் சரிதான். நமது திருவாளர்——அவர்கள் துணித் துறவியானார். உலகம் அவரைப்போற்றலாம், அல்லது பழிக்கலாம். அதற்கு அவர் என்னசெய்ய முடியும்?

(௩-ம் பக்கத் தொடர்ச்சி.)

இருப்பதனால், மதுரையில் திரு. செல்லமய்யனவர் போன்றோர் இருக்கின்றார்கள். தாம் சொந்தமாய் நூற்ற நூலைக்கொண்டு, அழகாய் செய்யப்பெற்ற, சேர்த்தியான மூன்று கதர்த்துண்டுகளைக் கொண்டுவந்து, முதலாவதாகக் காந்தியடிகளை வந்தித்தவர் அவர். அவற்றிற்கென நிர்ணயிக்கப்பெற்ற விலைக்கு இந்தத் துண்டுகளை வாங்க,யாரும் எனக் கேட்காமை இரக்கத்தக்கதாகும்.

சௌராஷ்டிரர்களைப்பற்றிக் குறிப்பிடாமல், நான் மதுரையைவிட்டுச் செல்லமுடியாது. தாங்கள் ஆதியில் ராஜகோட்டையிலிருந்து வந்தவர்களாதலின், காந்தியடிகளிடம் தங்களுக்கு விசேஷ உறவு உண்டென்று அவர்கள் பாத்தியம் கொண்டாடினார்கள். அந்நாட்டு நூலைக்கொண்டும், ஆலை நூலைக்கொண்டும் கைத்தறியில் செய்ததையும் காந்தியடிகள் தமது பிரசாரத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென, அவரிடம் அவர்கள் வாதித்தார்கள். அவர்கள் ஒரு கனிசமான பணமுடிப்பை அளித்தார்கள்.

நாடார்கள்.

மதுரையைவிட்டு ராஜபாளையம் செல்வதற்குமுன், வழியில் நாங்கள் சென்ற இடங்களைக் குறித்து, திருமங்கலம், பரமக்குடி, விருதுநகர் ஆகியவற்றைக் குறித்து, நான் சுருக்கமாகக் கூற வேண்டும். தங்களாற் சிறந்த அளவு செய்யாவிடினும், தங்களால் முடிந்த அளவு, அவை யாவும் செய்தன. தென்னிந்தியச் சுற்றுப்பிரயாணத்தில் ஏற்ற பலன் கிடைக்குமானால், நூல் நூற்றலையும் நெசவுத் தொழிலையும் நடத்த, விசேஷ சாதகம் கொண்ட இடங்களாகும் அவை. விருதுநகரில், சில ஆண்டுகளுக்கு முன்வரையில் ஆயிரக்கணக்கானவர்கள் நூற்று வந்திருக்கிறார்கள். ஆனால், கை நூலை வாங்குவோர் இல்லாமையால், இப்பொழுது அவர்கள் சும்மாவிருக்கிறார்கள். இந்தக் கடைசி இடம் நாடார்கள் வாழ்ந்த இடமாகும். செட்டும் உழைப்பும் கொண்ட இச்சமூகத்தாரிடம் இங்கு நாங்கள் பரிச்சயம் பெற்றோம். தர்மம் செய்யும் இயற்கை கொண்டவரான நாடார் ஒருவரால் கட்டப்பெற்ற அழகிய சத்திரம் ஒன்றில் நாங்கள் தங்கினோம். அதைத் திறக்குமாறு காந்தியடிகள் வேண்டிக்கொள்ளப்பெற்றார். அவர்கள் கஷ்டப்படும் ஒரு விரோதமான உரிமைக்குறைவைப் பற்றிக் குறிப்பிட்டு, ராஜபாளையத்தில், எச்சரிக்கையாக, காந்தியடிகள் இவ்வார்த்தைகளைக் கூறினார்:—"அவர்கள் முன்னேற்றத்தில் ஊக்கங் கொண்டுழைக்கும் சமூகத்தவர். அவர்கள் செ ப்படைந்திருக்கிறார்கள். மிக சேர்த்தியும் தூய்மையும் கொண்ட சில பழக்கங்களை அவர்கள் வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள். மிக நன்றாக நிர்வாகம் செய்யப்பெற்றுவரும் ஒரு ஹைஸ்கூலை அவர்கள் நடத்திவருகிறார்கள். நாடார் சமூகத்தைச் சேர்ந்தவர்களாயினும் சரி, பிற எந்தச் சமூகத்தைச் சேர்ந்தவராயினும் சரி, எல்லா மாணவருக்கும் அங்கே இலவசக்கல்வி அளிக்கப்படுகிறது. அவர்களது பள்ளிக்கூடங்களைப் போலவே அவர்களது கோவில்களிலும் எல்லோரும் தாராளமாகச் செல்லலாம். பொது ஜனங்களது உபயோகங்களுக்காக, அவர்கள் தோட்டங்கள் அமைத்திருக்கிறார்கள். இவையெல்லாம் பிறரும் "நகல்" செய்து அனுஷ்டிக்கத்தக்கவைகள் ஆகும். ஆதலினால், மதுரைக்கும் திருநெல்வேலிக்குமிடையே உள்ள கோவில்களில் நுழையக் கூடாதென்று, துயவாழ்க்கையினரான இம்மனிதர்கள் தடுக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை நான் கேட்ட பொழுது, நான் எவ்வளவு திடுக்கிட்டிருந்திருப்பேன் என்பதை நீங்கள் யோசித்துக்கொள்ளலாம். இந்த விஷயத்தைப் பற்றி நான் கேள்விப்பட்ட பொழுது, எனது தீர்த்தமதத்தைக் குறித்தே வெட்க உணர்ச்சி கொண்டேன். மதுரைக்குச் சென்றிருந்த காலத்தில், வேலைத் தொந்திரவினாலும் சேரமில்லாமையாலும் அங்குள்ள மீனாட்சியம்மன் கோவிலுக்கு யான் செல்லவில்லை. என்றாலும், இந்தப்பிரதேச உரிமையான நிண்டாமையைப்பற்றி யான் கேள்விப்பட்ட பின்னர், அந்தக் கோவிலுக்குள் நான் ஒரு பொழுதும் அடியெடுத்துவைக்காதது, ஒரு பாக்கியமே என்று நான் உணர்ச்சி கொள்கிறேன். எப்பொழுது நான் ஓர் கோவிலுக்குச் சென்றாலும், அதில் தீண்டப்பெறுதோர் நுழைய விடப்படார் என்பதை அறிவேனாதலின், ஆழ்ந்த அமைதியான உணர்ச்சியை அடைய கொள்ளுகிறேன். என்பற்றிய மட்டில்

# வாரக்கடிதம்.

ஒரு நாயாடி (நெருங்கப்படாதோரு)க்கும் எனக்கும் மிக அற்ப வேற்றுமையையும் நான் காணவில்லை. ஒரு நாயாடி அனுபவிக்காத ஒரேவொரு உரிமையையும் நான் அனுபவிக்கக் கவலை கொள்ளவில்லை. எனவே, தெற்கே போகப்போக, என்னையே ஓர் நாயாடி எனக் கூறிக்கொள்வதில் எனக்குச் சளிப்பாகும். என்றாலும், இந்தத் தீண்டப்படாதோரும், நெருங்கப்படாதோரும், பார்க்கப்படாதோரும், கோவில்களுக்குள் நுழைய முடியாதென, பழக்க வழியினால் நான் தெரியவந்தேன். கடவுளின் ஆலயத்தில் ஒரேவொரு நபரை நுழையவிடாது தடைசெய்வதற்கும் மிகச்சிறிதும் நியாயமில்லை என்பதன்று; ஆனால், குறிப்பிட்ட பிரதேசத்தில் நாடார்களுக்கு விரோதமான இந்தப்பொருளற்ற தடையைப் பொறுத்துக்கொள்வது எனக்கு முடியவில்லை."

ஒழுங்கு கறுப்பான 'தேனீக்கூடு'

ஆனால், ராஜபாளையத்திற்கு வருவோம். பிரத்தியட்சமான கதர் வேலையிலும் கதர் பணம்வசூலிடத்திலும் பசி கொண்டு கிடக்கும் காந்தியடிகளின் ஆன்மாவுக்கு, ராஜபாளையம் சென்றது ஓர் ஆறுதலாயிருந்தது. சில நாட்கள் கதர்ப்பணவசூல்மட்டில் செய்து வந்தபின்னர், நூற்போரையும் நெசவாளிகளையும் கொண்ட சுறுசுறுப்பான தேனீக்கூடாகவிருந்த அந்த இடத்திற்கு வந்தோம். அந்தப் பிரதேசத்தில், நூற்போர் ஆயிரம் பேருக்கு மேல் இருக்கிறார்கள். கையால் நூற்கப்பெற்ற நூலை மட்டிலுமே செய்யும் நெசவாளிகள் நூறுபேர் இருக்கிறார்கள். கரைவேய்ந்தழகிய சிறுமுற்றமொன்றில், இவர்களில் நூறுபேர் தங்கள் சர்க்காக்களைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். நான் இதுவரை பார்த்தவற்றுளெல்லாம் மிகவுண்மையான கதிர்கள் அவற்றிலிருந்தவையேயாகும். இவர்களின் குடும்பத்தினர் ஒரு மூலையில் உட்கார்ந்து, பஞ்சு கடைந்து, இவர்களுக்காகப் பட்டை போட்டுக்கொண்டிருந்தார்கள். இவர்கள் ௨௦ கிர் முதல் ௩௦ கிர் நல்வரை நூற்கிறார்கள். அவர்களிற் சிலர் மாதமொன்றுக்கு ௬ ரூபாய் வரையில் சம்பாதிக்கிறார்கள் என்பதைக் கேட்டு, காந்தியடிகள் சந்தோஷத்துடன் அதிசயித்தார். அதன் காரணம் மற்றப்பகுதியில் உள்ள நூற்போரைவிட அவர்கள் அதிகத் திறமையுடையவர்களாகவும், அதிக உழைப்பாளிகளாகவும் இருப்பதும், நூற்பதில் அவர்கள் அதிக நேரத்தைச் செலவழிப்பதும், அவர்களுக்கான பஞ்சுகடையும் வேலை அவர்களது உறவினர்களால் செய்யப்பெறுவதுமாகும்.

பர்டாகாசின் (முகமூடி யொழித்த) பெண்மணிகளின் இன்னோர் கூட்டம்நடைபெற்றது. ஆந்திர நாட்டின் பழைய க்ஷத்திரியஅரசர்களின்வம்சத்தைச் சேர்ந்தவர்கள் இந்தப் பெண்மணிகள். தென்னிந்தியாவிற்கூட, அவர்கள் முகமூடி வழக்கத்தை பற்றிக் கொண்டிருக்கிறார்கள். ஞாபகத்திற்கெட்டிய மட்டில், அவர்களது முதற் கூட்டம் இதுவேயாகும். அவர்களுள் நூற்கவிரும்புவோருக்கு வழங்கப்பெறுவதற்காக, நூறு இராட்டினங்களை, அவர்களது நண்பரொருவர் கொண்டு வந்தார். அன்று முதல் நூல் நூற்பதாகவும், கதர் உடுத்துவதாகவும், அவர்களுக்குள் மிகுந்த செல்வமதிகளான பெண்மணிகளில் ஒருவர் வாக்குக் கொடுத்தார்.

"ஆனால், நீங்கள் கல்யாணமானவரா" என்று காந்தியடிகள் கேட்டார்.

"ஆம்" என்று அந்தப்பெண்மணி பதிலளித்தார்.

"உங்கள் கணவன் கதர் உடுத்துகிறாரா?"

"இல்லை" என்று நாணத்துடன் அவர் கூறினார்.

"அப்படியாயின், நீங்கள் கதர் உடுத்த அவர் அனுமதிப்பாரா?"

"அவர் விருப்பப்படியே நான் நடப்பேன்."

"அங்ஙனமாயின், உங்கள் வாக்குத்தத்தின் கதி என்னவாகும்?"

அந்தப் பெண்மணிக்குத் திகைப்பு ஏற்பட்டுவிட்டது.

"ஆனால், உங்கள் கணவரிடம் உங்களுக்கு எவ்விதச் செல்வாக்குமில்லையா" என்று மேலும் அவர் கேட்டார்.

"உண்டு" என்று, சிறிது தயக்கத்துடன் அவர் கூறினார்.

"எனவே, கதரை உடுத்தக்கூடாது என்று அவர் உங்களிடம் கூறினால், அவரது கட்டளையை நீங்கள் மீறமுடியும், முடியாதா?"

பெண்மணியின் மௌனம்.

"ராமனது கட்டளையைச் சீதை மீறினாள் என்பது உங்களுக்குத் தெரியுமா?"

காந்தி எதைக் குறிப்பிடுகிறார் என்பதை அவரால் தெரிந்துகொள்ள முடியவில்லை.

"நல்லது, நான் கூறுகிறேன். சீதை தன்னோடு காட்டுக்குவரக்கூடாது என்று அவளிடம் ராமன் கூறியபொழுது, அவள் கீழ்ப்படிந்தாளா? இல்லை. ஏனெனில், அவரைப் பின்பற்றிச் செல்வது தனது தர்மம் என்பதை அவள் அறிந்திருந்தாள். அதே வழியில், உங்கள் கணவனை நீங்கள் வழிபடலாம்; ஆனால், உங்கள் தர்மத்துக்குக் குறுக்கே அவர் நிற்கும்பொழுது, அதற்குக் கீழ்ப்படிய நீங்கள் மறுக்கவேண்டாமா?" படிப்பினை அவர் மனத்திற் பதிந்ததாகக் காணப்பட்டது.

பணமுடிப்புங்கூடக் கஷ்டப்பட்டுத் திரட்டப்பட்டதாகக் காணப்பெற்றது. பொதுக்கூட்டத்தில் நடைபெற்ற ஏலத்தில் காட்டப்பட்ட ஊக்கம் முற்றும் உற்சாகந்தரத்தக்கதாகும். சென்னைச் சட்டசபையில் சுயேச்சைக் கட்சியாரின் பிரதம கொறடாவான சாத்தூர் ஜமீன்தார் ஏலங் கேட்பதில் கலந்து கொண்டது பாராட்டத்தக்கதாகும். மதுரைப் பணமுடிப்புக்கு அவர் கணிசமாகப் பணம் அளித்திருந்தார், இங்கேயும், நன்கொடை கொடுத்தவர் ஜாபிதாவில் முதலாவதாக நின்றார்; வரவேற்புக் கமிட்டிக்கும் தலைவராயிருந்தார். சுயேச்சைக்கட்சியைச் சேர்ந்த இந்தப் பணக்கார ஜமீன்தார் கதரில் எடுத்துக்கொள்ளும் சிரத்தை, எங்கும் அவர் வகுப்பைச் சேர்ந்த மனிதர்கள் பார்த்துத் தாங்களும் அனுஷ்டிக்கத் தக்கதாகும்.

ஆனால், அவ்விடத்தைச் சேர்ந்த முதலாளிகள் சுமார் இருபது பேர் சேர்ந்து, கதர் உற்பத்திக்காரர்களின் சங்கம் ஒன்று அமைத்திருப்பதுதான், ராஜபாளையத்தின் உருசிகரமான விஷயங்களில் ஒன்றாகும். தங்கள் வரவேற்புப் பத்திரத்தில் அவர்கள் கூறியதாவது:— "இங்குள்ள வெவ்வேறு உற்பத்திக் காரர்களுக்குமிடையே, ஓரளவு போட்டி ஏற்பட்டிருக்கின்றது. ஆதலினால், கதர் வேலையில் பணம் போடுவதில் சிரத்தைகொண்ட யாவருடைய பங்குகளையும் கொண்ட கதர் உற்பத்திக் கம்பெனி ஒன்றே ஒன்றை அமைத்துக்கொள்ள, நாங்கள் தீர்மானித்திருக்கிறோம். சீக்கிரத்தில், அதை நாங்கள் 'ரெஜிஸ்டர்' செய்யப்போகிறோம். அதைத் திறந்ததாகக் கூறுமாறு, உங்களைச் சம்பிரதாயமாய்க் கேட்டுக்கொள்ளுகிறோம்." அந்த வேலை காந்தியடிகளின் உள்ளத்திற் கியைந்தது. சங்கத்தை வாழ்த்துகையில், அவர்களது முயற்சியிலும், அவர்கள் மேற்போட்டுக் கொண்டிருக்கிற தொண்டிலும் வெற்றி கிடைப்பதற்கான சில பொன் விதிகளை அவர்களுக்குக் கூறினார். அவர்கள் இறங்கியிருக்கும் முயற்சி சிறிது பணம் சம்பாதிக்கத்தான்; ஆனால், மேற்போட்டுக் கொண்டிருக்கும் தொண்டோ, கடினமாய் உழைக்கும் கோடிக்கணக்கான ஜனங்களுக்கு உதவி செய்வதற்கானதாகும். காந்தியடிகள் கூறியதாவது:— "உலகிலுள்ள மிகப் பெருத்த வியாபாரக்கம்பெனிகள் உயர்ந்த விகிதப்படிக்கான லாபத்தைச் சார்ந்திருக்கவில்லை; ஆனால், விரிந்த தொழிலைச் சார்ந்திருக்கின்றன. இதை நினைவில் வையுங்கள். இங்கிலாந்து பாங்கி, உலகிலுள்ள மிகப்பெருத்த பொருளாதாரக் கார்ப்பொரேஷனாகும்; அது மிகுந்த செல்வாக்கையும் கொண்டது. அதற்கிருக்கும் செலாவணி அத்தகைய வேறெந்தக் கார்ப்பொரேஷனுக்கும் அநேகமாய் இல்லை. அந்தக் கார்ப்பொரேஷனின் சரித்திரம், உண்மையிலே, ஒரு அதிசயக் கட்டுக்கதை போலவே யிருக்கிறது. அந்தக்கார்ப்பொரேஷன் இன்றிருப்பதுபோல ஆவதற்கு, சில சிறந்த ஆங்கிலேயர்கள் தங்கள் செல்வாக்கையெல்லாம் கொட்டினார்கள். கொஞ்சமான மூலதனத்தின்மேல் ஏராளமான லாபத்தைச் சேகரிப்பதில்லையென்பதை அது ஒரு விதியாகக் கொண்டிருந்ததால், அதிசயிக்கத்தக்க நம்பிக்கையை அது பெற்றுவிட்டது. அது லாபம் சம்பாதிக்கத்தான் சம்பாதிக்கிறது; ஆனால், அது விசேஷ மூலதனம் பெற்றிருப்பதைக் கொண்டே சம்பாதிக்கிறது. ஆகையால், பெருத்த லாபம் பெறுவதை உங்கள் இலட்சியமாகச் செய்து கொள்ளாமல், நூற்போரது நன்மையை முக்கியமாக உங்கள் இதயத்திற் கொள்ளுவீர்கள் என நான் நம்புகிறேன். நீங்கள் உங்களுக்குள்ளேயே சச்சரவிட்டுக் கொள்ளலாகாது. நீங்கள் உண்மையான ஒற்றுமையை வளர்த்துக் கொண்டு, உங்கள் சொந்த ஆசையை வரம்புக்குட்படுத்திக் கொள்வீர்களானால், இங்கிலாந்துபாங்கியின் செலாவணியினும் பெரியதான செலாவணியைக் கூடப் பெற நீங்கள் ஏன் ஆசைப்படலாகாது என்பதற்குயாதும் காரணமில்லை. என்றாலும், இங்கிலாந்து பாங்கியில் பத்துவரவு வைத்துக் கொண்டிருப்போர் பணக்காரர்களும் பெரிய மனிதர்களுமாவர். எனவே, அவர்கள் பெயர்களும் கணக்குகளும் சிறான அளவு பெரியதான ஒருபேரேட்டுக்குள் வைத்து வரமுடியும். ஆனால், உங்களது பத்துவரவுக்காரர்களது பெயர்களை அடக்கிக் கொள்ளப் போதிய அளவு பெரியதானபெயரேடேகிடையாது. நீண்டகாலம் சென்றால்தான் உங்களுக்கு யான் சொல்லியவையெல்லாம் நன்கு நடக்கும். மனோராச்சியம் செய்பவன் போல் யான் பேசுவதாக, உங்களுக்குத் தோன்றலாம். ஆனால், நான் மனோராச்சியம் செய்யவில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். இந்திய ஜனங்களது நம்பிக்கையை யான் பெறமுடியுமாயின், உலகத்திலுள்ளவை யாவற்றினும் பெரிய கூட்டுறவுச் சங்கமாக, அகில இந்திய நூற்போர் சங்கத்தை ஆக்கிவிடலாமென நான் நம்புகிறேன். அந்தக் காலம் வெகுதூரத்திலிருக்கலாம். ஆனாலும், நான் எனது நம்பிக்கையை இழக்கப் போவதில்லை. உங்கள் பத்துவரவுக்காரர்கள் யாவரிடமும், உங்களைச்சுற்றியுள்ள எல்லா ஜனங்களிடமும் உங்களுக்குச் செலாவணியிருக்க வேண்டும். அது தான் உங்களுக்குத் தேவை. பொன் முட்டைகளை இடும் வாத்தை நீங்கள் கொல்லாவிட்டால், (அதாவது போராசை கொண்டு ஆத்திரப்படாவிட்டால்) உங்களுக்கு அவ்விதமே செலாவணி கிடைக்கும். குறைந்த லாபத்தைக் குறித்து, தெளிவான, நியாயமான விதிகளை நீங்கள் செய்து கொள்ளவேண்டும். அவற்றைக் கண்டிப்பானவையாகவும் உங்கள் சங்கத்தைக் கட்டுப்படுத்துவனவாகவும் செய்யவேண்டும். நான் எதிர்பார்ப்பதை நீங்கள் அனுபவத்தில் செய்து முடிப்பீர்களென, நான் நம்புகிறேன்."

இன்னுமோர் உண்மைக் கிருஸ்தவர்.

சுற்றுப் பிரயாணத்தில் சில இடங்கள் முதன் முறையாகச் சென்றவையாகும். பிரம்மாண்டமான கூட்டங்கள், சிலவேளை, மாங்கள் குவிந்து கொண்டிருப்பதால் பார்க்க முடியாத வனத்தையொப்ப, ஆகிவிடுகின்றன; என்றாலும், கோவில் பட்டியில் ஒரு முதிய கிருஸ்தவப் பெண்மணி, ஏராளமாய்க் கூடியிருந்த கூட்டத்தினிடையே 'இடித்துப் புடைத்துக்கொண்டு' வந்து, அமைதியாக அருகே வந்துசேர்ந்தார். அவர் காந்திஜீயின் அடிகளில் வீழ்ந்து, தமது கண்களில் நீர் பெருக, ஒரு பணமுடிப்பை வணக்கமாய்ச் சமர்ப்பித்தார். அது அவருடைய பள்ளிக்கூடப் பெண்களிடமிருந்து சேகரிக்கப்பெற்றதாகும். "எனது பள்ளிக்கூடப் பெண்களில் பத்துப் பேர் நூற்றுக்கொண்டிருக்கிறார்கள்" என்ற செய்தியைமட்டிலுமே அவர்காந்தியடிகளிடம் தெரிவித்துக்கொண்டு, ஆழ்ந்த வணக்கத்தோடு திரும்பிச் சென்றார். தைக்கப்படாத நீண்ட கதர்த்துணி ஒன்றைமட்டிலுமே அவர் உடுத்தியிருந்தார். ராகேல் அம்மாள் என்ற அவருடைய பெயரே அவரது மத பக்திக்கு ஏற்றதாய் விளங்கியது. (ராக்கேல் என்பது செம்மறியாடு என்பதைக் குறிக்கும். செம்மறிக்குட்டி என்பது மிகச் செல்வமாகவைக்கப்பெற்றிருக்கும் சொத்து என்ற பொருளில் ஆங்கிலத்தில் பழமொழியாக வழங்கப்பெறுகிறது—பா்) அவர் சிறான வருவாயுள்ள ஒரு கைம்பெண் ஆவர். கோவில் பட்டியில் கொடுக்கப் பெற்ற பணமுடிப்பில் பத்திலொரு அளவுள்ள தொகையான ௬0௧ ரூபாய் அவர் அளித்தார்.

---

# ஒழிவு நேரம்.

(ப. ராமஸ்வாமி.)

மனிதனுக்குத் தன் உணவுக்கும் உடைக்கும் பாடுபடக்கூடிய காலம் போக மிகுந்த நேரத்தை ஒழிவு நேரமென்று சொல்லப்படுகின்றது. உலகம் முழுதும் வேண்டிய உணவுக்கும் உடைக்கும் மட்டும் மெய்வருந்திப் பாடுபட்டால் மனிதருக்கு ஒருநாளில் பெரும்பாகம் ஒழிவு நேரமாய்விடும். மக்கள் விழித்திருக்கும் நேரத்தில் எந்தெந்தக் காரியங்களை எவ்வெப்பொழுது செய்து முடிக்கவேண்டுமென்பதைப்பற்றி முன்னாலேயே யாதொரு யோசனையும் செய்யாமல் சமயத்திற்குமட்டும் அவசியப்பட்ட செயல்களைச் செய்து வருவதால்தான் எண்ணியவேலைகளும் முடியாமல் எடுத்த காரியமும் பூர்த்தியாகாமல் போய்விடுகின்றன. நம்மக்கள் கழிந்துகொண்டே போகும் காலத்தைப்பற்றிக் கவனிப்பதில்லை.

"அவகாசமில்லை", "போதிய நேரமில்லை" என்னும் கூக்குரல்கள் எங்கு பார்த்தாலும் கேட்கப்படுகின்றன. ஆனால் உண்மை அப்படியில்லை. இப்பொழுது நாம் வாழ்கின்றபடியே யிருந்தாலும் எவ்வளவோ காலத்தை வீணைக் கழிக்கின்றோம். உபயோகப் படுத்தாமற் செலவாகும் நாழிகை எத்தனை, நாள்களெத்தனை? ஒருகாசு தவறிப்போய்விட்டால் அதுபோன்ற எத்தனையோ காசுகள் சம்பாதிக்கக்கூடிய நேரத்தை அதைத் தேடுவதில் செலவிடுகிறோம். ஆனால் பொருள் போய்விட்டால் பின்னால் தேடிக்கொள்ளலாம். நோயால் தேகம் இளைத்துவிட்டால் பின்னால் மருந்துண்டு பத்தியமிருந்து வலுவடைந்து விடலாம். கெட்டநடத்தையைக்கூடக்கட்டுப்பாடான வாழ்வினால் நேர்மைப்படச் செய்யலாம். ஆனால் கழிந்துபோன நாழிகையும் நாளும் என்றும் திரும்பிவரப்போவதில்லை. இதனாலேயே நமது முன்னோர்கள் நல்ல தருமத்தை இன்றே செய்யவேண்டுமென்றும் இன்றும் இப்பொழுதே செய்யவேண்டுமென்றும் கூறியுள்ளார்கள். காலச்சக்கரம் சுழன்றுகொண்டேயிருக்கின்றது. ஒளி, ஒலி இவற்றினுடைய வேகமும் அதற்கிணையில்லை. சூரியன் உதிக்கிறான், மறைந்து விடுகிறான். இவ்வாறாக நாட்கள் கழிந்துகொண்டே போகின்றன. ஒவ்வொரு நாள் காலையும் நமக்குப் புதிய ஒளிவந்து ஊக்கமளிக்கின்றது. இத்தகைய ஊக்கத்தையும் ஒளியையும் வீணைக் கழிப்பது காலத்தை மட்டும் கழிப்பதல்ல, நம் தேகபலத்தையும் கழிப்பதாகும். வீணைப்போன பொழுது அசைவற்றுச் சோம்பியிருக்கும் நமது வல்லமையையும் அழைத்துக்கொண்டு போகின்றது.

உலக சரித்திரத்தைப் பார்த்தால் மிகப் பெரிய காரியங்களெல்லாம் ஒழிவு நேரங்களில் செய்யப்பட்டிருக்கின்றன என்பது புலனாகின்றது. காலத்தை வீணைக் கழித்த எவனும் பெரிய வீரனாவது பண்டிதனாவது இருந்ததில்லை. பெரியோரனைவரும் காலத்தைச் செலவழிப்பதில் மிகுந்த கருமிகளாயிருந்திருக்கிறார்கள்.

வங்காள மகாகவியாகிய ரவீந்திரநாத தாகூர் முன்காலத்தில் நன்றாய்த் தூங்குவதுகூடக் கிடையாதாம். நள்ளிரவில் திடீரென்று எழுந்திருந்து மேசையடியில் அமர்ந்து எழுத ஆரம்பித்துவிடுவாராம். அவர் தந்தையார் எவ்வளவு வேண்டியும் கேளாது காலையில் பொழுது விடிந்ததுகூடத் தெரியாமல் எழுதிக்கொண்டே யிருப்பார். இப்படி யெழுதப்பட்ட நூல்கள்தாம் இக்காலையில் உலகத்தில் எங்கணும் போற்றிப் புகழப்படுகின்றன.

இங்கிலாந்தின் பிரதம மந்திரியாயிருந்த கிளாட்ஸ்டன் பிரபு தாம்செல்லுமிடங்களுக்கெல்லாம் ஒரு சிறு புஸ்தகத்தையும் எடுத்துச் செல்வார். போகுமிடத்தில் கிடைக்கும் ஒழிவு காலத்தை வீணாக்காது அப்புஸ்தகத்தை யெடுத்துப்படிப்பார். மந்திரிக்கு அவ்வளவு விலைமதிப்புள்ளதாயிருந்த காலம் நமக்குமட்டும் வீணைக்கழிக்க வேண்டிய தொன்றாகுமா?

நம்மில் படித்தவர்களும் கனவான்களும் கழிக்கக்கூடிய வீண் காலத்தை ஒரு கலைஞனிடமோ தொழிலாளியிடமோ சொற்பவிலைக்குக் கொடுத்துவிட்டால் அவர்கள் எத்தனையோ சித்திரம் எழுதிச் சிலைகள் அமைத்து மாளிகை கட்டிவிடுவார்கள்.

நமது ராமாயணத்தைப்போல் ஆங்கிலேயர் பெரியதோர் காவியமெனக் கருதும் ஸ்வர்க்கநஷ்டம் என்ற புராணம் மில்டன் என்பவரால் எழுதப்பட்டது. அவர் உபாத்திமைத் தொழில் முதலிய பலவேலைகளுக் கிடையில் இதையும் எழுதியிருக்கிறார். இது போல இலையில் போயுட்கார்ந்து சாப்பாடுவருவதற்குள் எத்தனையோ பேர்கள் பல புஸ்தகங்கள் எழுதிவிடுகின்றனர். முன் நடந்தவை நடந்துவிட்டன. நடக்கப்போவதும் நமக்குத் தெரியாது. இப்பொழுது கிடைத்திருக்கும் காலத்தை எப்படி நல்வழிப்படுத்துவதென்பதே நமது கவலையாயிருக்கவேண்டும்.

பலர் இலக்கியப் பயிற்சியில் உழைத்துத் தம் வாழ்நாளில் பெரும் பகுதியைச் செலவிடுகின்றனர். இலக்கியங் கற்பதிலும் நேரமெல்லாம் சுறுசுறுப்புடன் வேலை செய்தாலும் அநேக காலம் வீணாய்ப்போய்விடுகிறது. பல ஆண்டுகள் நூலாராய்ச்சி செய்தும் கடைசியில் தனக்கும் உலகத்திற்கும் விசேஷப் பலனில்லாத மனிதனை நாம் பார்க்கின்றோம். இம்மாதிரி ஏற்படுவதற்குப் பல காரணங்களுண்டு. இலக்கியக்கல்வியில் தேர்ச்சியடைய விரும்பும் உழைப்பாளிகள் கவனிக்கவேண்டிய விஷயங்களும் பலவுள.

ஒரு முழு நூலையும் படிப்பதைவிட, அதிலிருந்து எடுத்தெழுதப்பட்ட ஒரு உயர்ந்த பாகத்தைப் படித்து நாம் மகிழ்வடைகிறோம். சிறந்த படங்கள் எழுதிய கலைவல்லோனைவிட, அவன் எழுதிய படங்களைத் தேர்ந்தெடுத்து விற்கும் வியாபாரியை நாம் ஆதரித்து, கேட்ட விலைகொடுத்துப் படங்களை வாங்குகின்றோம். நூலில் சில பாகங்களை நாம் விரும்புவது அவற்றின் சுருக்கத்திற்காகவும் இனிமைக்காகவுமே, ஆகையால் நூல்கள் விளக்கமாயும் சுருக்கமாயும் இருக்கவேண்டுவது மிகவும் அவசியமாகும். நூல்கள் எழுதுவோரும் படிப்போரும் இதை மனதில் வைத்துக்கொள்ளுவது மிகுந்த பயன் தரும்.

படிப்பது மிக எளிதான ஓர் காரியமென்று நினைத்துப் பல பாஷைகளையும் நூல்களையும் கற்றுவிட ஆவல் கொண்டு ஒன்றிலும் தேர்ந்த ஞானத்தை அடையாமல் பலர் வருந்துகின்றனர். வாங்கிய புஸ்தகங்களில் மடித்திருக்கும் இதழ்களைப் பிரித்து பார்ப்பதற்கில்லாமலே பலருடைய காலம் கழிந்து விடுகின்றது. ஆகையால் ஒருவன் கற்கவேண்டிய பாஷைகளையும் நூல்களையும் முதலில் நிர்ணயஞ் செய்துகொள்ளுவது நலம். பிறபாஷைகளைக் கற்று தேர்ந்த ஞானம் பெறுவது கடினமான காரியம். எனினும் குறிப்பிட்ட சிலவற்றைக் கற்க வேண்டியது அவசியமாகின்றது. தன் சுயபாஷை கற்பதற்கும் தான் எழுதும் நூல்களில் உபயோகிப்பதற்கும் எளிதாகவும் இருப்பதால் முதலில் தன் தாய்மொழியை நன்கு கற்றல் வேண்டும். வேற்று பாஷையில் எழுதப்பட்ட ஒருபக்கத்தைப் படிப்பதற்குக் கூடக் கடினமாயும் அதிக நேரச் செலவாயுமிருக்கின்றது. தன் சொந்த மொழியிலுள்ள ஒரு பக்கத்தைப் பார்த்தவுடன் ஒருவன் சீக்கிரம் படித்துவிடுகிறான். தாய் மொழிப் பயிற்சியே மிக முக்கியமாகும். அதற்குத் துணையாகச் சில வேற்று மொழிகள் கற்க வேண்டுமென்பதும் நமது நோக்கமாயிருக்க வேண்டும். இது போலவே கற்க வேண்டிய நூல்களையும் அதற்குச் செலவாகும் நேரத்தையும் கூடியமட்டும் முயற்சித்து நிர்ணயஞ் செய்து கொண்டாலொழிய, நினைத்த காரியம் முடிவெய்தாது. கற்பதில் நமக்குப் பேராசையிருந்தால் மாத்திரம் போதாது. நேரத்தைச் செலவழிப்பதிலும் செட்டாக இருக்க வேண்டும்.

நாம் மற்றவற்றிற் போல் இலக்கியத்திலும் செய்யும் வினையைத் திருந்தச் செய்து முடிக்க வேண்டும். படம் எழுதுபவன் தீட்டவேண்டிய வண்ணத்தையும் உருவத்தின் அளவையும் கணித்துச் செய்தால் ஒருவாறு அது முற்றுப்பெறுகின்றது. ஒரு பாஷையில் வல்லவன் சரியான வார்த்தையைச் சரியானவிடத்தில் வைத்து அழகுற வாக்கியங்கள் அமைத்துவிடுகிறான். அது போல, தான் கற்று முடிக்க வேண்டிய விஷயங்களைத் தீர்மானித்துத் தொடங்குவோனுக்கும், படமெழுதுபவனுக்கு வண்ணமும் அளவும், பாஷையில் வல்லவனுக்குக் குறித்த சொல்லும் வைக்க வேண்டிய இடமும் போலவும், அவ்விஷயங்களின் முக்கியமான பாகங்களை முற்றும் கற்க வேண்டியது அவசியமாகும்.

படிக்க வேண்டிய ஒழுங்கையும் அளவையும் தீர்மானிப்பதால் மிகுந்த காலம் வீணாகாமற் காத்துக் கொள்ள வழியேற்படுகின்றது. இத்துடன் ஒருவன் கற்க வேண்டி எடுத்துக்கொண்ட முக்கியமான விஷயத்திற்கு முரண்படாமலிருக்கும் பல இதர விஷயங்களையும் கற்றுக் கொள்ளலாம். ஆனால் எதை கற்றாலும் முக்கியமாய்க் கற்க வேண்டியதற்குத் துணைபுரிவதாயிருக்க வேண்டும்.

கற்குங்காலத்தில் இடையில் எந்த விஷயமும் குறுக்கிட்டுத் தடை செய்யாது பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு வியாபாரி சாமான் வாங்குபவர்கள் கேட்பதையெல்லாம் தடுமாற்றமின்றிக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்கிறான்; கொடுக்கும் பணத்தையும் விடாது பெற்றுக் கொள்ளுகிறான். எத்தனைபேர் எதைக்கேட்டபோதிலும் அவன் சலனப்படுவதில்லை. இருந்த இடத்திலேயே இருக்கிறான். சாமான் கொடுப்பதும்பணம்வாங்குவதும் ஒழுங்காக நடக்கின்றது. இதுபோலல்ல இலக்கியப்பயிற்சியின் நடுவில் ஏற்படும் இடையூறுகள். ராமாயணத்தில் விபீஷணன் அடைக்கலம் புகுந்தபோது சாம்பன் முதலிய பலரும் அவனை ஏற்றுக்கொள்ளக் கூடாதென்று இராமபிரானுக்கு எடுத்துச் சொன்னபின் அனுமன் தன் கருத்தை யெடுத்த மிகுந்த வியத்துடன் சொல்லிவரும் பாகத்தைப் படித்துவரும்பொழுது இடையில் தடையேற்பட்டுவிட்டால், பின்னர் மறுபடியும் சாம்பன் சொல்லியதிலிருந்து தொடர்ந்து படித்தாலொழிய, அனுமன் அழகுற எடுத்துச்சொல்லும் கூற்றுக்களை நாம் அறிந்து கொள்ளமுடியாது.

எந்தவிஷயத்திலும் நமக்கு ஆசைமட்டுமிருந்து பயனில்லை. காலத்தைச் சிக்கனஞ் செய்யக் கற்றுக்கொள்வதே நமது முதற்கடமை.

---

# தற்காப்பைக் கருதியே.

மாஜிஸ்திரேட்:—இந்தக் கட்டாரிகள், அந்தவாள், விஷச்சிமிழ்கள் இவற்றையெல்லாம் ஏன் வைத்துக்கொண்டிருந்தாய்? கன்னக்கோல்கள், கடப்பாரைகள், கள்ளச்சாவிக் கொத்துக்கள், உளிகள், சுத்தியல் இவையெல்லாம் வேறு வைத்திருந்திருக்கிறாய்; அவை வைத்திருப்பது உங்களுக்கு சகஜந்தான். ஆனால், துன்பமிழைக்கத்தக்க ஆயுதங்களை நீ வைத்திருந்ததெதற்கு?

திருடன்:—எஜமானே! என்னை நட்புமுகத்தோடு வரவேற்கக்கூடியவர் ஒருவர் கூட இரார் என்று எனக்கு நிச்சயமாய்த் தெரிந்த இடங்களுக்கெல்லா நான் செல்ல வேண்டியிருக்கிறது. முரட்டுத்தன்மையும் கொடுமையும் கொண்ட மனிதர்களிடையேயெல்லாம் கூட, என் வேலை என்னை அடிக்கடி இட்டுச் செல்லுகின்றது. இந்தக்கருவிகள் இல்லாது சென்றால், என் உயிருக்கே ஆபத்து விளைந்து விடக் கூடுமல்லவா? இந்தத் தற்காப்புக்கூட இல்லாமல், நான் எப்படி எனது வேலையில் துணிந்திறங்க முடியும்? இவை வெறும் தற்காப்பைக் கருதித்தான், எஜமானே! வெறும் தற்காப்பே.

## ஆளுக்குப் பாதி.

டொரதி டிக்ஸ் என்பவர் 'டிட்பிட்ஸ்' பத்திரிகையில் எழுதுவது வருமாறு:—

ஆளுக்குப்பாதிப் பங்கு என்ற முறையில் நடந்துகொள்ளுவதுதான், மணத்தை வெற்றிகொண்டதாகச்செய்யும் மர்மம். மணம் என்பது, ஆணும் பெண்ணும் தத்தமக்குள்ள யாவற்றையும் போட்டு நடத்தும் கூட்டுத்தொழிலாகும். ஆனால், அதில் இருவரிலொருவர் மிக அடிக்கடி அதிகாரம் முழுவதையும் தமக்கு ஏகபோகமாக்கிக் கொண்டுவிடுகின்றார்கள்.

* * *

அநியாயம் செய்யப்பெற்றதாக உண்டாகும் உணர்ச்சியும் அக்கிரமமாய்க் கொடுமை புரியப்பெறுவதால் உண்டாகும் கீழ்ப்படிவமையும் காதலைக்கொன்று விடுகின்றன; மேலும், கணவருக்கும் மனைவிகட்குமிடையே கிரத்தமான விரோதத்தையும் உண்டுபண்ணிவிடுகின்றன. தாங்கும் சுமைகளும் செய்யும் தியாகங்களும், மணமானவர் காம்புகளின் மீது ஏறிச் சவாரி செய்வதில்லை; ஆனால், தாங்கள் நியாயமாய் நடத்தப்பெறவில்லை என்ற உணர்வே, அவர்களை வருத்துகின்றன.

* * *

மணமான முதல் சில வருடங்கள் வரை கணவன் மனைவிஆகிய இருவரும் பரஸ்பரம் மற்றவருக்குமேல் சர்வாதிகாரம் பெறவேண்டுமென்று முயலுகிறார்கள். இதனால் ஏற்படும் போர்க்களத்தில், மிக சேர்த்தி கொண்டகாதல் மலர் நாசமடைந்துவிடுகிறது. தங்கள் குடித்தனத்தை ஆளுக்குப்பாதிப் பங்கு என்ற அடிப்படையின்மேல் நடத்துவதென்று நிச்சயித்த தீர்மானத்தைக் கைக்கொண்டு, கணவனும் மனைவியும் வாழ்க்கைத் துவக்கியிருந்தால், அவை இல்லாதொழியும். கணவனின் சொல்லே சட்டமாகக் கருதப்படும் விஷயங்களையும், மனைவி சொல்லிக்கொள்ள உரிமை உண்டெனக் கருதப்படும் விஷயங்களையும் அவர்கள்எவ்வளவு சமாதானமாய்த்தீர்த்துகொள்ளலாம்! கணவன் அல்லது மனைவி, தான்தான் விசேஷ ஆசைகொண்டவற்றை அனுபவிக்கும் உரிமையை, தன்னிஷ்டப்படி குறை கூறிக்கொண்டிராது, விட்டுக்கொடுத்து விடுவாரானால், எவ்வளவு சண்டைகளும் சச்சரவுகளும் இல்லாதொழியும்!

* * *

தன் மனைவியின் பாவாடை இவ்வளவு அகலந்தான் இருக்கவேண்டுமென்பதுவது, அவள் தன் தலைமயிரைக் கத்தரித்துக்கொள்ளலாமா கூடாதாவென்பதையாவது ஒரு மனிதன் எதற்காகத்தீர்மானிக்கவேண்டும்? மேலும், தன் கணவன் சுருட்டுக் குடிக்கக் கூடாதென்று தடுக்க முயற்சிக்கவாவது, அவரது காலர்கள் (கழுத்துப்பட்டைகள்) எவ்வளவு உயரந்தானிருக்கவேண்டுமென்று தொந்தரவு செய்யவாவது ஒரு பெண்ணுக்கு என்ன உரிமை?

* * *

மேலும், பணவிஷயம் இருக்கிறது. அநேகம் கணவரும் மனைவிகளும் அதைப்பற்றி மணவறை துவங்கி மயானம் வரையில் போராடுகிறார்கள். மனைவியாகவும்தாயாகவும் பெண் தனது கடமையைச் செய்கிறாள்; தனதுகணவனைப்போலவே அவ்வளவு கஷ்டத்துடன் தானும் உழைக்கிறாள். குடும்ப வருமானத்தில் தானும் தனது பங்கைப்பெறவேண்டும் என்றும், குதர்க்கங்களும் கேள்விகளுமின்றி, அது தனக்களிக்கப் பெறவேண்டுமென்றும் அவள் உணர்ச்சிகொள்வது நியாயமேயாகும்.

* * *

அநேக மனிதர் இதைச்செய்ய மறுக்கிறார்கள். தங்கள் மனைவிகள் குடித்தனத்தை நடத்துவதற்காக அவர்களுக்கு ஓரளவு நிவேதனம் இந்தமனிதர்கள் அளிப்பதில்லை. தங்கள் சொந்தப்பணத்திலிருந்து இவர்கள் அவர்களுக்கு ஒரு காசுகூட அளிப்பதில்லை. அவர்களுக்கு உணவும் உடையும் தருமத்திடுவதுபோல அளித்து, அவர்களுக்கு ஒரு பைசா வேண்டுமானாலும் பிச்சைக்காரர்களைப்போலத் தங்களிடம் வருமாறு செய்கிறார்கள்.

* * *

தங்கள் கணவருக்குச் சகாயம் புரிவதற்காக, செட்டாக நடந்து கொள்ள, அநேகம் மனைவிகள் விருப்பமுடையவர்களாகவே இருக்கிறார்கள். தங்கள் கணவர் தங்களை நியாயமாய் நடத்துவதாக அறிந்தால், தங்களுக்குமீறியகாரியங்களையும் அவர்கள் மகிழ்ச்சியுடன் இயற்றுவார்கள். ஒரு இல்லம் எப்படியிருக்கவேண்டுமோ அப்படிப்பட்டதாக அதை ஆக்க, கணவனும் மனைவியும், ஒற்றுமையுடன் உழைத்துத் தங்களால்சிறந்ததையெல்லாம் செய்யவேண்டும். குழந்தை வளர்ப்பில் கணவன் ஏன் பங்கெடுத்துக் கொள்ளக்கூடாது? மாலைப் போஜனம் முடிந்தவுடனே, நாள் தோறும் இரவில் வெளியே செல்லுவதற்குப் பதிலாக, சில நாள், மாலைநேரத்தில் வீட்டில் தங்கி, குழந்தைகளை ஏன் கவனித்துக் கொள்ளலாகாது?

* * *

மறுபுறம் சொல்லுமிடத்து, ஒரு பெண்ணும் தனது கணவனிடம் நியாயமாக நடந்து கொள்ளுவதுடன், அவர் தமது பங்கு வேலையை எவ்வளவு நன்கு இயற்றுகிறாரோ அவ்வளவு நன்றாகத் தனது வேலையையும் செய்யவேண்டும். அவள் கணவனுக்கு இதமாக வீட்டை வைத்துக்கொள்ளாவிட்டாலும், தங்கள் வருமானத்திற்குக் கட்டுமாறு குடித்தனம் செய்யாவிட்டாலும், கணவன் தோழமை கொள்ளத் தக்கவாறும் புத்திசாலித்தனமாகவும் அனுதாபமுடையவளாகவும் நடந்துகொள்ள எல்லாவிதத்தும் முயலாவிட்டாலும், கணவனுடன் ஆளுக்குப்பாதிப்பங்கு முறையில் அவள் நடந்து கொண்டவளாகாள். தற்கால மணம், ஆளுக்குப்பாதிப் பங்கு முறையாலேயே உயிர்த்திருக்க முடியும். அடுத்த தடவை மணச்சடங்கு முறையைப் புதுப்பிக்கும்போழ்து, பின்வரும் கேள்வியைக் கேட்கவேண்டுமென்று விதி செய்வார்களாக:— "இந்த மனிதன் அல்லது ஸ்திரீயிடம் நீ நியாயமாய் நடந்து கொள்வாயா?"

---

## ஆ. தெற்கூர்
## "சமத்துவ வாசகசாலை"

(ஸ்ரீ மு. கி. பாடியன.)

சாதியொடு சமடமெனும் வேற்றுமையால் நாடுற்ற தாழ்ச்சி நீங்கக்
கோதகலும் நம்மோடு பிறந்தவராய் ஒடுக்கலுறுங் குலத்தினோர்க்கும்
நீதிசொலும் பத்திரிகை படிப்பதற்கும் சொற்பொழிவு நிகழ்த்து தற்கும்
நிதனுகாச் "சமத்துவவா சகசாலை" கண்டார்கம தெற்கூர் நல்லோர். (௧)

விலங்கெனவே கானகத்தில் முற்காலத் திரிந்தோரும் மெய்யி லெங்கும்
இலங்கவெனப் பச்சை நிறங்குத்தி மகிழ்ந்துள்ளோரும் இழிவு தீர்ந்து
நலன் பலவும் பெற்றோங்க வாசகசாலையின் பெருக்கும் நலிவிலாத
டலன்றரும்டல் பத்திரிகை தாமுமோ ரேதுவெனப் பகர்வர் மேலோர். (௨)

ஊணுறக்கம் தாம் மக்கட் பிறவியினுலாம் பயனென்றளத் தெண்ணாது
காணுதலுக் கரியடல செய்திபுகல் பத்திரிகை களிக்கக் கண்டு
வீணுரையாடாத டலசோதரர் தம்முடன் பேசி வியந்து மெய்மை
பேணுதலால் நாடெங்கும் ஒற்றுமையாம் கதிர்வீசிப் பெருகுங் கண்டீர். (௩)

சீமையினில் செப்பானில் அமெரிக்க நாட்டினினும் தெருக்கள் துத்தத்
துய்மை செயும் தொழிலோரும் புல்விற்குங் கிழவியரும் சோர்வில்லாது
நிமையிலாப் பத்திரிகை தினந்தோறும் காண்பார் நம்செல்வர் இல்லோர்
காயிதனைப் படிப்பதனால் யாதுபயன் பெறுவமென நகைப்பார் அந்தோ. (௪)

அறிவுவலி பெருக்குதலோடுடல் வலியும் வளர்த்தல்மிக அழகிற் றென்று
முறையுணரும் சான்றோர்கள் நவிலுமொழி கடைப்பிடித்து முற்றுந் தூய
நெறியுடைய "பந்தாடும் ஒருநிலயம்" கண்டார்கள் நோர்மை ஒன்றே
குறியாக்கைக் கொண்டுள்ள தெற்கூர்வாழ் தனவணிகக் குணக்குன் றன்னர். (௫)

ஆகையினால் அப் பீர்கீர் சமத்துவ வாசகசாலைக் கங்கத் தீராய்
ஒகையொடு பத்திரிகை படித்தறிந்து நூல்கள்பல உணர்ந்தும் கேட்டும்
தேசமது பெற்ற பயனடைந்து சுயமரியாதைச் சிறப்புற் றோங்கி
நாகருலகு குற்றவர்போல் சுதந்திரமும் சமத்துவமும் நண்ணி வாழ்வீர். (௬)

---

## ராஜீய லஞ்சமா?

கன்னி ஆக்னிஸ் மெட்லீ என்பவர் "பீபிள்" பத்திரிகையில் "இந்தியாவும் அடுத்த யுத்தமும்" என்ற தலைப்பின் கீழ், தொடர்ச்சியாக ஐந்து கட்டுரைகள் எழுதியுள்ளார். ஆசிய நாட்டில் சினாவுக்கும் ருஷியாவுக்கும் விரோதமாக பேளுட்டவரால் ஓர் யுத்தம் சமீபத்தில் நிகழ்த்தப்பெறும் எனவும், அதற்கான யுத்த முஸ்தீப்புகள் செய்யப்பெறும் இடங்களில் இந்தியாவும் ஒன்று என்றும் அவர் கூறுகிறார். கன்னி ஸ்மெட்லீ பிரிட்டனிடம் விரோதங்கொண்டவர் என்பது மட்டிலுமன்று, போல்ஷ்விக்காரிடம் அனுதாபம் கொண்டவர் என்பதும் தெளிவு. கன்னி ஸ்மெட்லீ கூறுவன யாவற்றையும் நாம் ஏற்க முடியாதெனினும், அங்ஙனமே அவை யாவற்றையும் நாம் ஒதுக்கித் தள்ளிவிடவும் முடியாது. இந்திய அரசியல் வாதிகளின் சிந்திப்புக்குரிய, சில பகுதிகளை மட்டில் அவரது ஐந்தாம் கட்டுரையினின்றும் மொழிபெயர்த்து, இங்கு தருகிறோம்:—

* * *

"'அரசியல் சீர்திருத்தம்' அல்லது புதிய அரசியல் அமைப்பு என்பதன் மூலம் இந்தியத்தலைவர்களை ஏமாற்ற, அல்லது வசப்படுத்திக்கொள்வதனால், அரசியல் முறையில் யுத்தமுஸ்தீப்பு இப்பொழுதுநடைபெறுகிறது. ௧௯௧௪-ம் ஆண்டில் கைக்கொள்ளப்பட்ட வழியே இது. 'அரசியல்சீர்திருத்தம்' தங்களுக்கு அளிப்பதாக வாக்களிக்கப்பெற்றதற்காகவே, தாங்கள் ஒருபொழுதும் பார்த்திராத, தங்களுக்கு யாதொரு தீங்கும் விளைத்திராத ஒருநாட்டவர் மீது ஆங்கிலநாடு யுத்தம் புரிவதற்கு, இந்தியர்கள் அசட்டுத்தனமாய் அப்பொழுது உதவி புரிந்தார்கள். ௧௯௩௦-ம் ஆண்டில் அரசியல் சீர்திருத்தக் கமிஷன் விசாரணைக்கு உட்காரும் பொழுது, மறபடியும் அநேக இந்தியர் ஆசியநாட்டவரைக் காட்டிக்கொடுப்பதைக் காண்போம்."

* * *

"ருஷியாவும்சீனாவும்எந்தவிடங்களினின்றும் தாக்கப்படப் போகின்றதோ அவ்விடங்களிலொன்றாக இந்தியா ஆகப்போகிறது. தனது சொந்தக்கைகளினாலேயே பின்னும் பின்னும் ஆழ்ந்த அடிமைத்தனத்தில் வீழ்த்தப்பெற்றிருக்கும் இந்தியா, ஆசியாக் கண்டம் முழுவதையும் அடிமைப்படுத்துவதற்குச் சாதனமான ஒரிடமாகப்போகிறது."

* * *

"ருஷியா இஸ்லாம் மதத்திற்கு விரோதியென்றும் இந்துக்கள் போல்ஷ்விக்கரென்றும், ஒரு புறத்தில் முஸ்லீம்கள் தூண்டப்பெறுகிறார்கள். முஸ்லீம்கள் ஆப்கானியருடனும் துருக்கி நாட்டினருடனும் கூடிக்கொண்டு, இந்தியாவை ஜயித்து, முஸ்லீம் ராஜ்யத்தை நிறுவக் காத்துக்கொண்டிருப்பதாக, மறுபுறம் இந்துக்கள் எச்சரிக்கப்படுகிறார்கள்."

* * *

"யுத்தம் வரின் பஞ்சாப்மாகாணம்உதவியற்றநிலையிலிருக்க் வேண்டும்என்பதற்காக, அதில் பிளவை உண்டாக்கி, பலவீனப்படுத்துவதற்காக, யோசனையுடன் செய்யப்பெற்ற முயற்சிகள் என்று, பஞ்சாப் மதக்கலவரங்களை நான் கருதுகிறேன். வட இந்தியாவில், ஒரு இடத்தில், சமூகச்சச்சரவை உண்டாக்க உதவி செய்வதற்காக, இரகசியமாய் உழைப்போருக்கு மாதம் ஒன்றுக்கு ரூ. ௫௦,௦௦௦ அரசாங்கத்தாரால் கொடுபட்டு வருவதாக, ஐரோப்பிய ரொருவர் என்னிடம் சொல்லியுள்ளார். இவர் இந்தியாவில் பல மாதகாலம் இருந்தவர்; ஆங்கில உத்தியோகஸ்தர்களுடன் அடிக்கடி இருந்திருப்பவர்." (இதைப்பற்றித் தம்மால் நிச்சயம் கூறுவது முடியாதென கன்னி ஸ்மெட்லீ அடுத்தாற்போல் குறிப்பிடுகிறார்.)

(சம்பத்தித் தொடர்ச்சி.)

"'பிரிட்டிஷ் டோரிகட்சியினரின் ஆட்சியின் சுமையைத் தாங்கமுடியாமல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் ஆட்டமெடுத்துப் போய்விட்டது. இப்பொழுது பிரிட்டிஷ் தொழிற்கட்சியினர் ஓடிவந்து, தாங்கள் விஷயங்களைச் சரிப்படுத்தும் வரையில் சிறிது பொறுத்திருக்குமாறு, பிரிட்டிஷ் கொடிக்குக் கீழ்ப்பட்ட அடிமை நாட்டினர்க்கு வேண்டுகோள் செய்கிறார்கள்! தாங்கள் பொதுநல ஆட்சி (காமன் வெல்த்)' என்று, வேறு பெயர் கொடுத்துள்ள ஏகாதிபத்தியத்திற்காக, அவர்கள் (விஷயங்களைச் சரி) செய்வார்கள்."

* * *

"இங்கிலாந்தை நோக்கி நிற்பதை விட்டு, தான் உட்பட்டுக் கிடக்கும் அடிமைத்தனத்தை ஒழிக்கத் தன்னையே, தன்னைமட்டிலுமே நோக்கித்திரும்பவேண்டிய காலம் இந்தியாவுக்கு வந்திருக்கிறது. அதற்கு உதவி வேண்டுமானால், தன்னை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் அரசுக்கு வேண்டுகோள் செய்துகொள்வது மூடமுயற்சியாகும்."

(௬-ம் பக்கம் பார்க்க.)



## நான்காம் பாகம்.

### அத்தியாயம் ௨௨.

சமீபத்தில் இந்தியாவுக்குத் திரும்பிச் செல்வது என்ற நம்பிக்கையை, நான் இப்பொழுது அடியோடேவிட்டுவிட்டேன். ஒரு ஆண்டுக்குள் வீட்டுக்குத் திரும்பிவந்துவிடுவதாக, நான் எனது மனைவிக்கு வாக்களித்திருந்தேன். வீட்டுக்குத் திரும்பலாம் என்றநம்பிக்கையளிப்பதானதோற்றம் எதுவுமே இல்லாமல், அந்த ஒரு ஆண்டும் கழிந்து விட்டது. எனவே, எனது மனைவியையும் குழந்தைகளையும் என்னிடமழைத்துக் கொள்வது என்று தீர்மானித்தேன். தென்னாப்பிரிக்காவுக்கு அவர்கள் வந்தபடகில், எனது மூன்றாவது மகனான ராமதாஸ், படகின் காப்டனிடம் (மாலுமி) விளையாடியதில், தனது புஜத்தை முறித்துக் கொண்டான். மாலுமி அவனை நன்றாகக் கவனித்து வந்ததுடன், கப்பலின் டாக்டரைக் கொண்டு அவனுக்கு வைத்தியமும் செய்வித்தார். ஆதலால், எலும்பு நழுவிவிடாதபடி கட்டித் தொங்கவிடப்பெற்றிருந்தகையுடன், ராமதாஸ் கரை சேர்ந்தான். நாங்கள் வீடுபோய்ச் சேர்ந்தவுடனே, தகுந்த ஒரு டாக்டரைக் கொண்டு, காயத்தைக் கட்டுமாறு, அந்த டாக்டர் யோசனை கூறினர். என் கட்சிக்காரர்களில், எனது அரைகுறை வைத்தியத்தில் நம்பிக்கை கொண்ட சிலரை, மண், நீர் சிகிச்சையைப்பரீட்சித்துப் பார்க்குமாறு வற்புறுத்தியதில் கூட வெற்றி பெற்றிருந்தேன்.

அங்ஙனமாக, ராமதாஸுக்கு நான் என்ன செய்ய வேண்டும்? அவனுக்கு எட்டே வயது. அவனது காயத்தை நான் கட்டுவதில் அவனுக்கு ஆட்சேபனையுண்டா என்று நான் அவனைக் கேட்டேன். தனக்கு ஆட்சேபனையில்லவே யில்லையென்று, புன்சிரிப்புடனே, அவன் கூறினான். தனக்கு மிக நன்மையைத் தருவது எது என்பதைத் தீர்மானிக்க, அந்த வயதில் அவனுக்குச் சாத்தியமன்று. ஆனால், அரைகுறை வைத்தியத்திற்கும் கிரமமான வைத்தியத்திற்கும் உள்ளவேற்றுமை அவனுக்கு மிக நன்றாய்த்தெரியும். நான் வீட்டு வைத்தியம் செய்யும் வழக்கமும் அவனுக்குத் தெரியும். தன்னை என்னிடம் ஒப்படைக்கப்போதிய நம்பிக்கையும் அவன் என்னிடம் வைத்திருந்தான். பயத்துடனும் நடுக்கத்துடனும், நான் காயத்தின் கட்டை அவிழ்த்தேன். காயத்தைக் கழுவி, சுத்தமான மண்ணை ஒத்தடமாக அதன்மீது தட்டி, மறுபடியும்கட்டினேன். இவ்வாறு சுமார் ஒருமாதம்வரையில் நாள் தோறும் கட்டிவர, காயம் முற்றும் குணமாயிற்று. கஷ்டம் ஒன்றும் ஏற்படவில்லை; வழக்கமான வைத்தியத்தைச் செய்வதால் காயம் குணமடைய எவ்வளவு காலம் செல்லுமென்று கப்பல் வைத்தியர் கூறினாரோ அதைவிட அதிகக்காலமும் ஆகவில்லை.

இத்தகைய வீட்டு வைத்தியமுறைகளில் எனது நம்பிக்கையை, இதுவும் ஏனையசோதனைகளும் அதிகப்படுத்தின. இன்னும் அதிகமான தன்னம்பிக்கையுடன், இப்பொழுது அவற்றை இன்னும் அநேக வியாதிகளுக்குப் பிரயோகிக்கலானேன். காயங்கள், காய்ச்சல்கள், அஜீரணம், காமாலை ஆகியவற்றாலும் வேறுநோய்களாலும் பீடிக்கப்பட்டவர்களுக்கும் மண், நீர், உபவாசம் ஆகிய வைத்திய முறைகளைச் செய்து பார்த்தேன். அநேகர் விஷயத்தில் குணமும் ஏற்பட்டது. ஆனால், தென்னாப்பிரிக்காவிலிருந்த பொழுது எனக்கிருந்த நம்பிக்கை எனக்கு இப்பொழுது இல்லை; இந்தச் சோதனைகளில் பிரத்யட்சமான ஆபத்துக்களும் இருக்கின்றன என்று கூட எனது அனுபவம் காட்டியிருக்கிறது.

## காந்தியடிகளின் சரிதம்.

### இறைவன் யாரைப்பாதுகாக்கிறார்?

காந்தியடிகள் "நவஜீவன்" பத்திரிகையில் எழுதியது.

ஆகையினால், இங்கு அவற்றைப்பற்றிக் குறிப்பிட்டது, அவற்றின் வெற்றியை நிரூபிப்பதற்காகவன்று. எந்தச் சோதனையிலும் பூரண வெற்றிபெற்றதாக, நான் உரிமை கொண்டாடமுடியாது. டாக்டர்கள் கூடத் தங்கள் சோதனைகளைக் குறித்து அத்தகைய உரிமை கொண்டாடமுடியாது. நூதனச்சோதனைகளில் இறங்க விரும்புபவன் முதலில் தன்னிடத்திலேயே அவற்றைத் துவங்க வேண்டும் என்று காட்டுவதே எனது நோக்கம். அதனால், உண்மை சீக்கிரம் புலனாகும். நாணயமாகச் சோதனை செய்பவனை இறைவன் எப்பொழுதும் பாதுகாக்கிறார். இயற்கை வைத்திய முறைகளில் எவ்வளவு கொடிய ஆபத்துக்கள் இருக்கின்றனவோ அவ்வளவு கொடிய ஆபத்துக்கள், ஐரோப்பியருடன் நெருங்கிய பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளும் சோதனைகளிலும் இருக்கின்றன. அந்த ஆபத்துக்களின் வகைமட்டிலுமே வேறாகும். ஆனால், அந்தப்பழக்கங்களை ஏற்படுத்திக் கொண்டதில், அதன் ஆபத்துக்களைப்பற்றி நான் ஒரு பொழுதும்அவ்வளவாக நினைத்ததில்லை.

என்னுடன் வந்து வசிக்குமாறு, போலக் அவர்களை நான் அழைத்தேன். நாங்கள் இருவரும் இரத்தக் கலப்புடைய சகோதரர்கள் போல வசிக்கத்துவங்கினோம். திரு. போலக்கும் மிஸஸ் போலக்கும் சில ஆண்டுகளாக ஒருவரை யொருவர் காதலித்திருந்தார்கள். ஆனால்,நல்லகாலம் வாட்டுமென்று, மணம் ஒத்திவைக்கப்பெற்றிருந்தது. மணவாழ்வில் இறங்குவதன் முன்னர், கொஞ்சம் பணம் சேகரித்துக் கொள்ள வேண்டுமென்று போலக் அவர்கள் விரும்பியதாக எனது தோற்றம். ரஸ்கின் அவர்களுடைய கருத்துக்கள் என்னைவிட நன்றாக அவருக்குத் தெரியும். ஆனால் ரஸ்கின் அவர்களது உபதேசங்களை உடனே தமது அனுபவத்தில் கொண்டுவருவதற்கு, அவரைச் சூழ்ந்துள்ள மேனாட்டு நிலைமைகள் அவருக்குத்தடையாகவிருந்தன. ஆனால், நான் அவருடன் வாதித்தாவது:—"உங்கள் விஷயத்திலிருப்பதைப்போல, உள்ள ஒற்றுமை எப்பொழுது ஏற்பட்டுவிடுகிறதோ அப்பொழுது, 'பணத்தைப்பற்றிய யோசனைகளுக்காகமாத்திரமே விவாகத்தை ஒத்திப்போடுவது நியாயமன்று. ஏழ்மை ஒரு தடையாகுமானால், எளிய மனிதர்கள் ஒருபொழுதும் விவாகம் செய்துகொள்ள முடியாது. மேலும், இப்பொழுது நீங்கள் என்னோடு வசிக்கிறீர்கள். குடித்தனச் செலவைப்பற்றிய கேள்வி இல்லை. கூடிய சீக்கிரத்தில் நீங்கள் மணம் செய்துகொள்ளவேண்டுமென்று நான் கருதுகிறேன்." முந்தி ஒரு அத்தியாயத்தில் நான் கூறியவாறு, திரு. போலக் அவர்களிடம் ஒரு விஷயத்தைக்குறித்து நான் இருமுறை வாதிக்கவேண்டிவந்ததே யில்லை. எனது வாதத்தின் வன்மையை அவர் அறிந்துகொண்டார். உடனே மிஸஸ் போலக்குக்குக் கடிதம் எழுதினர். மிஸஸ் போலக் அப்பொழுது இங்கிலாந்திலிருந்தார். அவர் இந்த ஏற்பாட்டை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு, சில மாதங்களில் ஜோகான்ஸ்பர்க் வந்துசேர்ந்தார். கலியாணச்செலவு ஏதேனும் செய்வது என்ற யோசனையே இல்லை. விசேஷ உடுப்புக்கூட அவசியமில்லை என்று கருதப்பட்டது. மணத்திற்கு ஒப்பந்தம் வைக்க, மதச்சடங்குகளைதையும் அவர்கள் விரும்பவில்லை. திரு. போலக் அவர்கள் பிறப்பினால் கிருஸ்தவர்; மிஸஸ்போலக் யூதஜாதியைச் சேர்ந்தவர். அவர்களிருவருக்கும்பொதுவான மதம் அறநெறி என்ற மதமே.

இந்தக்கலியாணம் சம்பந்தமாக, இடைநடுவில், ஒரு வேடிக்கையான நிகழ்ச்சியை நான் குறிப்பிடுகிறேன். திரான்ஸ்வாலில் ஐரோப்பியர் விவாகங்களைப்பதிவுசெய்யும் உத்தியோகஸ்தர், கறுப்பு அல்லது பிறநிறத்தவர்களின் மணங்களைப் பதிவு செய்யமுடியாது. பிரஸ்தாப மணத்தில் மணமகனின் தோழனாக, நான் அமர்ந்தேன். அந்தக்காரியத்திற்கு எங்களுக்கு ஒரு ஐரோப்பிய நண்பர் அகப்பட்டிருக்கமாட்டார் என்பதில்லை. அந்த யோசனையை திரு. போலக் ஏற்கவில்லை. எனவே, மணங்களைப்பதிவுசெய்யும்உத்தியோகஸ்தரிடம், நாங்கள் மூவரும் சென்றோம். நான் மணமகனது தோழனாக அமர்ந்த மணத்தின் தம்பதிகள் வெள்ளையர்களாயிருப்பார்களென அவர் எப்படி நிச்சயம் கொள்ள முடியும்? விசாரணை செய்யும் வரையில், பதிவு செய்தலை ஒத்திப்போட, அவர் உத்தேசித்தார். மறுநாள் கிறிஸ்து பிறந்ததினம். பக்தி சிரத்தையுடன் ஏற்பாடு செய்யப்பெற்றிருந்த மணத்தை, இத்தகைய அற்பக்காரணத்திற்காக ஒத்திப்போடுவது என்பதை எவரும் பொறுக்கமுடியாததாயிருந்தது. பதிவு இலாக்காவின் தலைமை உத்தியோகஸ்தரான பிரதம மாஜிஸ்திரேட்டை எனக்குத் தெரியும். எனவே, தம்பதிகளுடன், நான் அவர் முன் ஆஜரானேன். அவர் நகைத்துவிட்டு, பதிவு செய்யும் உத்தியோகஸ்தருக்கு ஒரு குறிப்பு எழுதி என்னிடம் தந்தார். இறுதியில், மணம் கிரமப்படி பதிவுசெய்யப்பெற்றது.

இதுவரையில் என்னுடன் வசித்து வந்த ஐரோப்பியர், முன்னடியே ஏறக்குறைய எனக்குத்தெரிந்தவர்கள். ஆனால், முற்றும் எங்களுக்கு அந்நியரான ஒரு ஆங்கிலப்பெண்மணி எனது குடும்பத்தில் புகுந்தாள். புதிதாய் மணமான தம்பதிகளுடன் எப்பொழுதேனும் எனக்குச் சச்சரவு நிகழ்ந்ததாக, எனக்கு ஞாபகமில்லை. ஆனால், எனது மனைவிக்கும் போலக் அவர்களின் மனைவிக்கும் ஏதேனும் சச்சரவுகள் நிகழ்ந்திருந்தபோதிலும், மிக ஒழுங்குபடுத்தப்பெற்றதும் ஒரே வகை மனிதர்களைக்கொண்டதுமான குடும்பங்களில் நிகழ்வதினும் அவை அதிகமானவையன்று. எனது குடும்பம் அடிப்படையிலேயே பற்பல வகை மனிதரைக்கொண்ட குடும்பம் என்று கருதப்படும் என்பதை நினைவில் வைக்கவேண்டும். பற்பல வகையைச்சேர்ந்தவரும் வெவ்வேறு இயற்கையைக் கொண்டவருமான ஜனங்கள் தாராளமாக அதில் சேர்த்துக்கொள்ளப்பெற்றார்கள். நாங்கள் யாவரும் ஒரே குடும்பமாயிருக்கிறோம்.

வெஸ்ட் அவர்களின் மணவிழாவையும் இந்த அத்தியாயத்தில் நான் கூறவேண்டும். எனது வாழ்வின் இந்தக் காலத்தில், பிரம்மசரியத்தைப் பற்றிய எனது கருத்துக்கள் பக்குவமடையவில்லை. எனவே, எனது மணமாகா நண்பர் யாவரையும் மணம் செய்து கொள்ளச் செய்வதில் நான் சிரத்தை கொண்டிருந்தேன். பழக்கம்போல வெஸ்ட் அவர்கள் தமது பெற்றோரைப் பார்ப்பதற்காக,லௌத் என்னுமிடத்திற்குப் போகப் புறப்பட்டார். சாத்தியமாயின், மணம் செய்துகொண்டு திரும்பும்படி அவருக்கு நான் யோசனை கூறினேன். போனிக்ஸ் யாவருக்கும் பொதுவீடாயிற்று. நாங்கள் யாவரும் குடியானவர்கள் ஆகிவிட்டதாகக் கருதப்பட்டபடியால், மணத்தைப் பற்றியும், அதன் வழக்கமான விளைவுகளைப் பற்றியும் நாங்கள் பயப்படவில்லை. திரு. வெஸ்ட் அவர்கள் தமது மனைவியுடன் திரும்பிவந்து சேர்ந்தார். அவர் லீஸெஸ்டரைச் சேர்ந்த எழில்கொண்ட ஓர் இளம்பெண். அவர் லீஸெஸ்டர் தொழிற்சாலையில், பாதரட்சை செய்வோரது ஒரு குடும்பத்திற் பிறந்தவர். இந்தத் தொழிற்சாலையில், வெஸ்ட் அவர்களின் மனைவியே சிறிது தொழில் செய்த அனுபவம் உடையவர். அவரை எழில் கொண்டவர் ('பியூடியல்'=கவிகள் உபயோகிக்கும் சொல்) என்று ஏன் கூறினேனெனில், அவரது ஒழுக்கத்தின் அழகு உடனே என்னைக் கவர்ந்ததாலேயே. சொல்லப்புகின், உண்மை அழகு உள்ளத்தின் தூய்மையிலேயே அடங்கியிருக்கிறது. திரு. வெஸ்ட் அவர்களுடன், அவரது மாமியும் கூட வந்து சேர்ந்தார். அந்த முதிய பெண்மணி இன்னும் உயிருடனிருந்து வருகிறார். தமது உழைப்பாலும், உற்சாகமும் மலர்ச்சியும் கொண்ட தமது தன்மையாலும், அவர் எங்கள் யாவரையும் வெட்கமுறச் செய்தார்.

இந்த ஐரோப்பிய நண்பர்களை மணம் செய்து கொள்ளத் தூண்டியதுபோலவே, நான் எனது இந்திய நண்பர்களையும் தங்கள் குடும்பத்தைத் தாய்நாட்டினின்றும் அழைத்துக் கொள்ள உற்சாகமூட்டினேன். இவ்வாறு, போனிக்ஸ் ஒரு சிறு கிராமமாக வளர்ந்தது. அரை டஜன் குடும்பங்கள் அங்குவந்து, குடிபுகுந்து, பெருகத்துவங்கின.

---

ஒரு கனவான் நீதிஸ்தலத்திற்குள் நுழைந்து, நியாயாதிபதியிடம், தமது குமாரன் கெட்ட நடத்தையைக் கைக்கொண்டு கெட்டுப்போவதாக முறையிட்டுக்கொண்டார்.

மாஜிஸ்திரேட்:— நீங்கள் புத்தி சொல்லிப்பார்த்தீர்களா?

கனவான்:— ஆயிரந்தடவை சொல்லியாய் விட்டது. நான் சொல்வதை அவன் கேட்டிருந்தானாயின், நான் இங்கேன் வருகிறேன்? மூடர்கள் சொல்லுவதை யெல்லாந்தான் அவன் கேட்கிறான். நீங்கள் ஏதாவது சொல்லிப்பாருங்கள், எஜமானே!

* * *

ஒரு இளைஞன் தனது நண்பனை நோக்கி:— நண்பா! நான் எப்படிப்பட்ட பெண்ணை மணந்து கொள்ளலாம்—ஒரு அழகான பெண்ணையா, அல்லது புத்திசாலியான பெண்ணையா? உன் யோசனை யென்ன?

நண்பன்:— உனக்குக் கல்யாணத்தில் விருப்பமேயில்லை யென்று நான் நினைக்கிறேன்.

இளைஞன்:— ஏன் அப்படிக்கூறுகிறாய்?

நண்பன்:— அழகான பெண்ணுக்கும் நல்லவரன் கிடைக்கும்; புத்திசாலியான பெண்ணுக்கும் நல்லவரன் கிடைக்குமல்லவா?

# மதிப்புரை.

## தசரதன் குறையும், கைகேயி நிறையும்.

குறிப்பு:—மதிப்புரைக்குவந்த நூல்கள் பல நீண்ட நாட்களாகத் தங்கிவிட்டன. காரணங்கூறி இனி ஆவதென்? அவற்றிற்கு உரியவர்களைத் தாமதத்திற்குப் பொறுத்துக்கொள்ளுமாறு வேண்டுகிறோம். சிறப்பாக "தசரதன் குறையும் கைகேயி நிறையும்" என்னும் நூலாசிரியரையும் "சுக்கிர நீதி"யின் மொழி பெயர்ப்பாசிரியரையும் தனித்துத் தாமதத்திற்கு மன்னிப்பு வேண்டக் கடமைப்பட்டிருக்கிறோம். அது அந் நூல்களின் உயர்வு நோக்கியென்று மற்றவர் வருந்த வேண்டுவதில்லை. அது காலத்தின் நீட்சி நோக்கியாகும். அந் நூல்கட்குப் பின்வந்த பல நூல்கள் மதிப்புரை பெற்று விட்டன. அவ் இரண்டையும் ஆசிரியர் தாமே பார்த்து எழுத விரும்பிய காரணமாகத் தாழ்த்தன. அவ் இரண்டில் ஒன்றிற்கு இக்கிழமை மதிப்புரை போந்துவிட்டது. மற்றொன்றிற்கு அடுத்தகிழமை போதரும்.

இன்று மதிப்புரையின் பொருட்டுக் கையிலிருக்கும் நூல்கள் வருமாறு:—

- க. சுக்கிர நீதி
- உ. ஞானசூரியன்
- ௩. தர்மவாசகம்
- ௪. வைத்தீசுரன் கோயிற் புராண வசனம்
- ௫. சுத்த சாதகம்
- ௬. விருத்தாசல புராணம்
- ௭. இல்லற இரகசியம்
- ௮. மக்கள் தாலாட்டு
- ௯. விபூதி உருத்திராக்கமகிமை
- ௰. பிரதோஷ மகிமை
- கக. சோதிட ஆசிரியன்
- கஉ. பன்னிரு திருமுறைத்திரட்டு
- க௩. கணித எண்சுவடி
- க௪. பகவத்கீதை மூலமும் உரையும்
- க௫. திருமுருகாற்றுப்படைச் சிற்றாராய்ச்சி
- க௬. ஆரியருக்கொருவெடிகுண்டு
- க௭. மநுநீதி தருமம்
- க௮. தத்துவராய சுவாமிகள் அடங்கன் முறை
- க௯. சமரச சன்மார்க்கத்தோத்திரத் திரட்டு

இந்நூல்கட்கு அடுத்த கிழமை தொட்டு மதிப்புரைவரும். ஆசிரியர்.

### தசரதன் குறையும், கைகேயி நிறையும்.

(ஆசிரியர், மதுரை வழக்கறிஞரும் தமிழறிஞருமாகிய திரு. ச சோமசுந்தரபாரதியார்; விலை அணாப்பத்து.)

இஃதோர் அருமந்த ஆராய்ச்சி நூல். இந்நூல் இராமாயணத்தொடர்பாக எழுந்தது. இராமாயணக்கதையறியார் இந்நாட்டில் மிகச் சிலரே இருத்தல் கூடும். அக்கதை அறிந்த அனைவரும் தசரதன் நிறையுடையானென்றும் கைகேயி குறையுடையாளென்றுமே கொண்டனர். இக்கட்டுரை தோன்றுதற்கு முற்காறும் இவ் உணர்ச்சியின் மாறுபட எவரும் உணர்ந்ததாக வெளிவரக் கண்டோமில்லை. நமது பாரதியார் கம்பர் வான்மீகர் ஆகிய இருபெரும் கவிகளையுமே சான்றுக் கொண்டு, இதுகாறும் உலகத்தார் கொண்ட உணர்ச்சிக்குமாறாக, தசரதன் குறையுடையானென்றும் கைகேயி நிறையுடையாளென்றும் கரிபல தந்து, எடுத்துக் காட்டியிருக்கும் எழில் அறிஞர்க்குப் பேருவகை அளிப்பதாகும்.

இந்நூல் வனப்பெலாம் ஒருங்கு கொண்டு திகழ்கின்றது. இந்நூலின் அரிய நடையும் இனிய தமிழும் எடுத்துக் கொண்ட பொருளை வலியுறுத்திச் செல்லும் திட்பமும் இடையிடையே நடையாக மடுத்திருக்கும் கம்பர் வள்ளுவர் ஆகிய இணையற்ற இரு பெரும் புலவர்களின் பாட்டின் நுட்பமும் ஆராய்ச்சி வல்ல அறிஞரை இன்பக்கடலாட்டி மகிழ்விக்கா நிற்கின்றன. எல்லாவற்றையும்விட, இந்நூலை ஆக்கியோரின் அஞ்சாமையே பெரிதும் போற்றற்குரியது. இந்நாள் தமிழ் நாட்டில் நூலை எதிர்த்து நோக்கி ஆயுந் திண்மையுடையார் அரியர். இத்துறையிற்றலைப்பட்ட அறிஞர் பாரதியார்க்குத் தமிழுலகம் கடப்பாடுடையது.

பாரதியாரின் இவ்வாராய்ச்சி நூலால் இராமாயணப் பெருமையே அழிந்துபோய் விட்டதென்று எவரும் கவலுற வேண்டுவதின்று. அவரே கூறுமாறு இது முடிந்த கொள்கையுமன்று. இவ்வாராய்ச்சியையும் இதற்கு மூலமாகிய கம்பர் வான்மீகரையும் நன்கு ஆய்ந்து பிழைகண்டு மறுக்க எவர்க்கும் உரிமையுண்டு.

"முழுதுலகளித்த மன்னன்" குறையுடையானென்றும், கேகயன்மாது நிறையுடையாளென்றும் பாரதியார் கொண்ட கொள்கைக்கு அவ ராதாரமாகக்கொண்டன,வான்மீகரிற்பலவும், கம்பரில் மறைபொருள் கொண்டதாச் கருதத்தக்க சில செய்யுட்களுமேயாம். இவ்விரு பெரும் நூல்களையும், இக்கருத்தை முன்னிறுத்திக்கொண்டு முற்றும் நன்குகத் துருவி யாய்ந்த பின்னரே, "வாய்மையும் மரபுங்காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்" குறையுடையான்தானு என நாம் முடிவு கட்டமுடியுமென்பதை,இந்நூலாசிரியராகிய நமது அன்பருக்கு அறிவித்துக் கொள்கிறோம். இவ்வாராய்ச்சிக்கு வேண்டியளவு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கும் சுலோகங்களும் கவிகளும் பெரும்பாலாக உடன்படத்தக்கமுறையில் மதிநுட்பமாக எடுத்தாளப்பட்டிருக்கின்றன. தக்க சான்று காட்டி மறுக்கப்படும்வரை இக்கொள்கை நின்று நிலவத்தக்கதுதான் என்பதுறுதி. எப்படியும் நன்கு துருவித் துருவி யாய்ந்து இக்கொள்கையை அடித்தல், அன்றி வன்மையாக உறுதிப்படுத்தல் ஆகிய இரண்டில் ஒன்றை—எது உண்மையோ அதை நிலைநாட்டல் அறிவுடைப் பெரியார் கடன்.

கேகயன்மாது நிறையுடையாளென்றும், அவள் காதற்கொழுனன் குறையுடையானென்றும் கருதுதற்குக் கம்பரினின்றும் சிறப்பாகப் பாரதியார் கொண்ட செய்யுள் "கெடுத்தொழிந்தனை" என்னும் தலைப்புடைய மந்தரை வாய்மொழியே. இச்செய்யுட்குப் பாரதியார் பகரும் உரை சிந்தையைக் கவர்வதாகும்.

நிற்க,இம்முறையில் இராமன் தவறுடையனு அன்று என்பது ஆராய்ச்சிக்குரியது. அன்று எனப் பாரதியார் முடிவுகட்டுகிறார். அம்முடிவுக்கு அவர் கூறும் காரணம் வருமாறு:—

> "இராமன் இஃது(பரதனுக்கு நாடுபிறப்புரிமையுடையது) உணரான் என்பதே பொருத்தமாகும். முன்னரே பரதன் பிறப்புரிமையைத் தானறிந்திருப்பின் "செப்பருங் குணத்திராமன்" தந்தை விருப்பத்திற் கிணங்கி இத்துணை விபரீத விளைவுக்கு இடந்தாரானன்றோ? அறிந்துவைத்தும அறத்துறைதிறம்பிப் பரதனுக்குரிய அரசைத் தான் அடைய விரும்பினன் என்பது, "தாயமையுமன்றித் தருமமும் தழுவி நின்றான்" இயல்புக்கும் பெருங்குணத்திற்கும் பொருந்தாதன்றோ?"

இதுகொண்டு இராமன் இஃதுணரான் என்று எங்ஙனம் நவிலல் கூடும்? இக்கூற்று,வாய்மைக்கு உறையுள் என்று பலகாலும் உலகெலாம் பாராட்டப்படும்தசரதன்,வாய்மை மறைத்துத் தீவினை நயந்து செய்தான் என்றுசெப்புதல் பொருந்தாதென்று புகல்வார்க்கு அரண்செய்வதாகுமன்றோ? குணத்தால் பாராட்டப்பட்ட ஒன்று, இராமன் அறியான் என்பதை உணர்த்தும் சான்றாகாது. "வானில் உந்தை சொல் மாயினல்......... நீ பிறந்துரிமையாதலால் அரசு நின்னதே," என இராமன் பரதற்குப் பிறப்புரிமையை உணர்த்தினதாகப் பாரதியார் உடன்படுகின்றார். இராமன் கோமுடி சூட நிச்சயித்த நாளில் அவன் அறியானென்றும், கடுமையார் கானகத்தில் பரதற்குஅறிந்து கூறினானென்றும் சொல்தல் பொருந்துமோ? இவ்விரண்டு செயல்கட்கும் இடையே சில நாட்களே இருந்திருத்தல் வேண்டும். அந்நாட்களில் இராமன் இதை அறிந்திருத்தல் கூடும் என்றால் ,அந்நாட்களில் இராமன் வழியினும் கானினும் இருந்த நாட்கள் போகச் சில நாட்களே; சில நாட்கள்கூட அல்ல, ஒரு நாளே; ஏன்? அதினும் சில நாழிகையேயன்றோ இராமன் ஊரிலிருந்தது; முடிசூட இருந்த அன்றே விடைகொண்டு மின்னொளிர் கானம் சென்றுவிட்டானன்றோ இராமன்? முடிசூடல் தடைப்பட்ட பின்னர், இராமன் காடுபுகு முன்னர், இடையிட்ட சில நாழிகைகளே யிருந்திருத்தல் வேண்டும் என்பது வெளிப்படை. இவ் இடையிட்ட காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் சோக நிகழ்ச்சிகளன்றி வேறின்று. இதற்கிடையில் இராமற்கு இப்பழங்கதையை நினைந்து தனித்து எவரே சொல்லியிருக்க முடியும்? கோசலையோ, வேறெவரோ ஈண்டுச் சொன்னதாகக் கம்பரினுமில்லை; வான்மீகத்திலும் இன்று. அன்றி,

இராமன் இஃதுணர்வான் முன்னரே என்பதற்கு வான்மீகத்திற் சான்றிருக்கிறது.

"இராஜ்யத்தில் உரிமையுள்ள பரதனைக் கண்டு தனக்கு அரசு கிடைக்குமோ அன்றோ" என இராமன் அஞ்சுவதாக மந்தரை வழுத்துவதாக வான்மீகர் கூறுகின்றார். அது மந்தரை வாய்ப்பெய்ததுதானே என மறுக்கலாம். தசரதனே இராமற்குச் சாற்றியதாகவும் வான்மீகர் சொல்கின்றார்.

> "பரதன் தேசாந்திரம் போயிருக்கின்றான்; என்றைக்குப் பரதன் மாமன் வீட்டிற்குப் போனானோ அன்று முதல் உன் அபிஷேகத்துக்குத் தக்க காலம் என்பது என்கருத்து. அவன் இப்பட்டினத்துக்குத் திரும்பிவாரா திருக்கும்வரை தான் உன் பட்டாபிஷேகத்துக்குத்தகுந்த காலம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆகையாற்றன் நாளையே உனக்குஇளவரசபிஷேகஞ்செய்ய நிச்சயித்திருக்கிறேன்"

என்று தசரதன், இராமனுக்குச் சொன்னதாக வான்மீகி கூறுங்கால் இராமன் இம்மாயம் உணர்ந்தானல்லன் என்று எவ்வாற்றால் கூறமுடியும்?. எனவே, வான்மீகியின் ராமன் இத்தவற்றினின்றும் நீக்கப்பெற்றானல்லன்.

கம்பராமனும்கூட, இத்தவறு சாராதொழிகின்றானில்லை. நமது பாரதியாரின் இவ்வாராய்ச்சிப்படி, பரதற்கு இராமன் தன் வாயினால்பிறப்புரிமை யுணர்த்தியதாக "நீ பிறந்துரிமையாதலால்" என்ற சொற்றொடர்க்குப் பொருள் கொண்டால், அப்பொழுதேனும் தசரதன் வாய்மை துறந்தான் என்பதை இராமன் அறிந்திருக்கின்றானன்றோ? அந்நிலையில் "அந்தோ! இனிவாய்மைக்காருளரே" என்று, வாய்மை துறந்த மன்னன்இறந்தமை நோக்கி இராமனே இயம்பியதாகக் கம்பர்கழறுவானேன்? தசரதன் வாய்மை தவறியது உண்மையென்று ஏற்படுமானால், அதனை அறிந்த இராமன், அறிந்த பின்னரும் வாய்மைக்கு உறையுள் என்பனவாதி சொற்றொடர்களால் அலங்கரிப்பது பொருந்தாது. எனவே, தசரதன்தவறுக்கு உடந்தையாக இருந்தான் இராமன்,என்றுவான்மீகத்தால் வெளிப்படையாக ஏற்படுகின்றது; கம்பராமனிடம் அக்குற்றம், காட்ட இடமில்லையென்று வாதிக்க மிகச்சிறு இடமிருந்த போதினும் வாய்மையில்லா மன்னனை, வாய்மையுடையானென்று வழுத்தி, வாய்மை தவறினன் கம்ப இராமனும்; என்று கூறுமலிருக்க முடியவில்லை.

எனவே, இன்னோன்ன இடர்ப்பாடுகளையெல்லாம் நுனித்துணர்ந்து தசரதன் குறையுடையானென்றும் கைகேயி நிறையுடையாளென்றும் முடிவு காண்டல் வேண்டும் என நாம் கருதுகிறோம். தசரதன் குறையுடையானென்றால் இராமனும் அத்தகையன் என்ற முடிவே தோன்றும் என்பது நமது கருத்து. ஆராய்ச்சியின் மெய்மை அவ்வாறனால், அவ்வெளிப்பாட்டில் நமக்குச் சிறிதும் தடையில்லை. தவிர,

இந்நூலாசிரியர், இராம கதை வான்மீகி கூறுமாறு சிறிதும், வழுவாமல் நடந்ததெனக் கருதுவதாகச் சில சில குறிப்புக்களினின்றும் தெரிகின்றோம். "மெய்ம்மறையா வான்மீகர்" "வான்மீகர்உண்மைக்கோசலை" "பொய்யில்புலவர்" என்பனவாதி சொற்றொடர்களால் குறிக்கின்றார். கம்பர் அந்நடந்த கதையை மாற்றி வேண்டுமாறு சித்திரித்ததாகவும் பாரதியார்கருதுகின்றார். கம்பர் செவிக்குத்தேனென இராகவன் புகழினைத் திருத்தியது உண்மை. நடந்ததை அப்படியே கூறியது வான்மீகம் எனக் கம்பர் கருதினால்லர் என்பது அவர் புதுக்கியதினின்றுமே நன்கு விளங்குகின்றது. கம்பர் வான்மீகத்தைக் கட்டப்பட்ட ஒரு அழகிய கதையாகவே கருதினர்; கதையை வேண்டுமாறு திருத்துவது இயல்பாகலின் தேனென இனிக்கத்திருத்தினர், அவர் நடந்த நிகழ்ச்சியே வான்மீகி கூறும் அனைத்தும் என்று கருதியிருந்தால் திருத்தியிருக்க மாட்டார். அவ்வாறனால் திருத்துவது முறையன்றன்றோ? அங்ஙனமேல் ஏன் சில இகழத்தக்க செயல்களையும் உயர் குணம் படைத்தோர்க்கு வான்மீகர் சொன்னார் என்றால், காரணம் பல; அதை ஈண்டு விரிக்கின் இம்மதிப்புரை அளவு கடந்துவிடும். அன்றியும் இந்நூலுக்கு அஃது அவ்வளவு இன்றிமையாத் தொடர்புடையதன்று.

இம்மதிப்புரைக் கட்டுரையை இம்மட்டோடு முடிப்போம். கைகேயிகொண்டதாக நமது பாரதியார் காட்டும் குறிக்கோள் இணையிலாப் பெருமைவாய்ந்தது; அஃது மெய்யென்று ஏற்றுக்கொள்ளப்படுமேல்கைகேயின் பெயர் சாலவும் போற்றத்தக்கது. அங்ஙனமானல், இராமன் பரக்குந்தொல்புகழு முதினை இதுகாறும் பருகிய உலகம், இனிக் கைகேயியின் நினைத்தற்குமரிய பெரும்புகழ்ப்போமுதைத்தான் பருகுமென்பதுறுதி.

---

# நான்காம் பாகம்.

## அத்தியாயம் உ௩.

குடும்பச் செலவு ஏறிக்கொண்டு வந்தாலும், எளிய வாழ்க்கை வாழ வேண்டும் என்ற ஆவல் தர்பனில் துவக்கியது என்பதை சென்ற அத்தியாயத்தினின்றும் நாம் தெரிந்து கொண்டோம். ஆனால், ஜொகான்ஸ்பர்க் வீட்டு வாழ்வு ரஸ்கின் அவர்களின் உபதேசத்தை ஒட்டி பெருத்த மாறுதலடைந்தது.

ஒரு பாரிஸ்டர் வீட்டில், வாழ்க்கையில் எவ்வளவு எளிய தன்மையைப் புகுத்த முடியுமோ அவ்வளவையும் புகுத்தினேன். சில சில்லறைத் தட்டு முட்டு சாமான்கள்கூட இல்லாமலிருப்பது சாத்தியப்படவில்லை. எனது உள்ளம் மாற்று அல்லாமல், வாழ்க்கையில் பெரிதும் மாறுதல் உண்டாகவில்லை. தன் கையால் செய்யக்கூடிய வேலையைத் தானே செய்யவேண்டுமென்ற விருப்பம் அதிகரித்தது. இந்த சிட்சையை ஒட்டியே என்னுடைய குழந்தைகளையும் வளர்க்கத் துவக்கினேன்.

ரொட்டியைக் கடையிலிருந்து நாங்கள் வாங்கவில்லை. கூனி முறைப்படி, காடி கலக்காத ரொட்டியை வீட்டிலேயே தயார்செய்ய ஆரம்பித்தோம். சாதாரண மில் மாவு இதற்கு ஏற்றதல்ல. கையால் அரைத்த மாவினால் எளிய தன்மையும் சுகமும் செட்டும் ஏற்படும் எனக் கருதப்பட்டது. எனவே, ஏழுபவுன் கொடுத்து, ஒரு கை இயந்திரம் வாங்கினேன். அந்த இயந்திரத்தின் இருப்புச் சக்கரத்தை ஒருவரால் சுற்ற முடியாது; இருவர் எளிதிலே சுற்றலாம். போலக்கும் நானும் குழந்தைகளும் அநேகமாக அதைச் சுற்றுவது வழக்கம். சீமதி காந்தியும் சில சமயங்களில் சுற்றுவதுண்டு. ஆனால், மா அரைக்கிற நேரத்திலேதான் அவள் சமையல் ஆரம்பிப்பது வழக்கம். போலக் அவர்களின் மனைவியும் எங்களிடம் வந்தவுடன் சுற்றுவதில் கலந்து கொண்டாள். மா அரைப்பது குழந்தைகளுக்கு நல்ல தேகப்பயிற்சியை அளித்தது. இந்தவேலையாவது வேறு எந்தவேலையாவது அவர்கள் பேரில் கட்டாயப்படுத்தப்படவில்லை ஆனால், அவர்கள் இதை விளையாட்டாகக் கருதிச் சுற்றுவார்கள்; களைத்துப்போனால், நின்றுவிடுவார்கள். ஆனால், எல்லாக்குழந்தைகளும்-பின்னர்நான் இந்த சரித்திரத்தில் கூறப்போகும் குழந்தைகள் உள்பட—ஒருபொழுதும் எனக்கு உதவிசெய்யத்தவறினதில்லை. என்னைச்சுற்றி, சோம்பேறிகள் இருந்ததில்லை என்பது பொருளல்ல; ஆனால், அநேகமாய் எல்லோரும் தங்கள் வேலையைக் களிப்புடன் செய்தார்கள். களைப்பு என்று சொல்லி, வேலைசெய்யாமல் ஏமாற்றப்பார்த்த குழந்தைகள் அந்த நாளில் இருந்ததில்லை.

எங்களுடைய வீட்டு வேலையைக் கவனிக்க, நாங்கள் ஒரு வேலைக்காரனை அமர்த்தியிருந்தோம். அவன் குடும்பத்தின் அங்கத்தினனுகவே எங்களுடன் வாழ்ந்துவந்தான். குழந்தைகள் அவனுடைய வேலையில் அவனுக்கு உதவி செய்வதுண்டு. நகரசபைத் தோட்டி, மலத்தை அப்புறப்படுத்துவான். ஆனால், வேலைக்காரனை ஏவாமலும் அவனை எதிர் பார்க்காமலும், கக்கூசை நாங்களே சுத்தப்படுத்திக் கொள்ளுவோம். குழந்தைகளுக்கு இது நல்ல பயிற்சியாயிற்று. எனவே, என்னுடைய பையன்களில் எவனுக்கும் தோட்டி வேலையில் வெறுப்பு உண்டாகவில்லை. எனவே, அவர்களுக்கு, பொதுவான சுகாதாரத்தில் நல்ல அஸ்திவாரம் ஏற்பட்டது.

# காந்தியடிகளின் சரிதம்.

## வீட்டு விஷயம்.

காந்தியடிகள் "நவஜீவன்" பத்திரிகையில் எழுதியது.

ஜொகான்ஸ்பர்க் வீட்டில், அநேகமாக, நோய் ஏற்படவில்லை. ஆனால், நோய் ஏற்பட்டால், குழந்தைகள் நோயாளிகளைப் பேணிப்பார்த்துவந்தார்கள். என்னுடைய பையன்களுக்கு இலக்கியக்கல்வி கொடுப்பதில், எனக்கு அக்கரையில்லையென்று நான் சொல்ல மாட்டேன். ஆனால், அதைப் பலி கொடுக்க, நான் தயங்கினது மில்லை. எனவே, என்பேரில் குறை கூற, எனது பையன்களுக்குக் காரணமுண்டு. சில சமயங்களில், அவர்கள் இதை வெளியிட்டுக் கூறியுமிருக்கிறார்கள். ஓரளவு குற்றவாளியென்று நான் ஒப்புக் கொள்ள வேண்டும். இலக்கியக் கல்வி அவர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று விருப்பமிருந்து, அத்தகைய கல்வியை நானே புகட்ட வேண்டுமென்று முயற்சி செய்தேன். ஆனால், இதற்கு அடிக்கடி ஏதேனுமொருதடை யேற்பட்டுக் கொண்டே வந்தது. அவர்களுக்கு வீட்டிலே கல்வி போதிக்க, யாதொரு ஏற்பாடும் நான் செய்யவில்லை. எனவே, அவர்களை எனது காரியாலயத்திற்கு, வீட்டிலிருந்து என்னுடன் தினசரி கூட்டிக் கொண்டு செல்வேன். போகவும் வரவும் சுமார் ஐந்து மைல் தூரமிருக்கும். இதனால், அவர்களுக்கும் எனக்கும் ஓரளவில், நல்ல தேகப் பயிற்சி உண்டாயிற்று. இவ்வாறு நடக்கையில், என்னுடன் சம்பாஷிக்க வேறு எவரும் இல்லையானால், சம்பாஷணையின் மூலமாக, பையன்களுக்கு ஏதேனும் சொல்லிக் கொடுப்பேன். என்னுடைய குழந்தைகள் யாவரும்—மூத்த பையன் ஹரிலால் நீங்கலாக, அவன் இந்தியாவிலேயே இருந்து விட்டான்—ஜொகான்ஸ் பர்க்கில் இந்த முறையில் வளர்க்கப்பட்டார்கள். ஒழுங்காக, நாளொன்றுக்கு ஒரு மணி நேரம் இலக்கிய சம்பந்தமான கல்விப்பயிற்சியை அவர்களுக்கு என்னால் கொடுக்க முடிந்திருந்தால், ஒப்புயர்வில்லாத கல்வியை, அவர்களுக்கு நான் கொடுத்திருப்பேன். அவ்வாறு செய்யத் தவறியபோனது அவர்களுக்கும் வருத்தம், எனக்கும் வருத்தந்தான். இந்தக் குறைபாட்டைப்பற்றி, மூத்தபையன் தனித்து என்னிடத்திலும் பகிரங்கமாகப் பத்திரிகைகளிலும் அடிக்கடி கூறியிருக்கிறான். சாத்தியப்படாத சங்கதியென்று ஏனைய பையன்கள் என்னை அன்புடன் மன்னித்து விட்டார்கள். (இவ்வாறு கல்வி போதிக்கமுடியவில்லையேயென்று) நான் மனமுடைந்துபோகவில்லை. நான்கல்லதகப்பனுக இருக்க முடியவில்லையே என்பதுதான் எனது வருத்தமாகும். ஆனால், சமூகத்தொண்டின் பொருட்டு நான் அவர்களுடைய இலக்கியக்கல்வியைப் பலிகொடுத்தேன் என்பது எனது உண்மையான கருத்தாகும். இந்தக் கருத்துத் தவறாயிருக்கலாம். அவர்களுடைய நடைநேர்மையை வளர்க்கும் எத்தகைய சாதனங்களிலும் நான் கவலைக்குறைவைக் காண்பிக்கவில்லை பென்பது தெளிவு. சரியாக, இதைப் பெற்றோர்கள் யாவரும் கவனிக்க வேண்டுமென்பது உறுதி. எனவே, என் முயற்சியை மீறி, என்னுடைய பையன்களிடம் குறைகள் காணப்படின், அது என்னுடைய அஜாக்கிரதையைக் காண்பிக்கவில்லை. அது அவர்களுடைய பெற்றோர்களின் குறைகளைப் பிரதிபலிப்பதாகும்.

பெற்றோர்களின் உடற் கூறுவன்ணங்களைப்பெறுவதுபோல, அவர்களுடைய குணங்களையும் குழந்தைகள் பெறுகின்றார்கள். சங்கத்தினால் வாழ்வு மாறலாம், வளரலாம்; ஆனால், வாழ்க்கை துவக்குவதற்கு, குழந்தைகளுக்கு மூலதனமாயுள்ளது அவர்களுடைய பெற்றோர்களிடமிருந்து கிடைக்கப்பெற்றதன்மைகளேயாகும். பெற்றோர்களிடமிருந்து கிடைக்கப்பெற்ற தீய தன்மைகளையும் மாற்றிக் கொண்டிருக்கும் குழந்தைகளையும் எனக்குத் தெரியும்; அது ஆன்மாவுக்கு இயற்கையிலேயே உள்ள தூய்மையினாலேயே.

இந்தக் குழந்தைகளுக்கு ஆங்கிலக் கல்வி போதிப்பதா, வேண்டாமா என்பதைப்பற்றி, நானும்போலக் அவர்களும் அடிக்கடி சுடச்சுட வாதம் செய்வதுண்டு. குழந்தைப் பருவமுதல், ஆங்கிலத்திலேயே யோசிக்கவும் பேசவும் தங்கள் குழந்தைகளைப் பழக்கும் இந்தியப் பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளுக்கும் தங்களுடைய நாட்டிற்கும் பாதகத்தை நாடுகின்றார்கள் என்பது என்னுடைய மாறாத நம்பிக்கையாகும். ஆங்கிலக் கல்வி போதிப்பதால், அந்தக் குழந்தைகள், அந்த நாட்டின் முன்னோர்களால் அளிக்கப்பெறும் ஆன்ம, சமுதாய, மூலதனத்தை இழந்துவிடுகின்றார்கள். எனவே, அந்த அளவில் அவர்கள் தேசத்தொண்டுக்குத் தகுதி யற்றவர்கள் ஆகின்றார்கள். இந்தக் கருத்துக்களை நான் கொண்டிருந்ததால், என்னுடைய குழந்தைகளோடு எப்பொழுதும் நான் குஜராத்தியிலேதான் பேசுவேன். போலக் அவர்களுக்கு இது ஒருபொழுதும் இனிப்பதில்லை. குழந்தைகளின் எதிர்கால வாழ்க்கையை நான் கெடுத்துவிடுகின்றேனென்று அவர் எண்ணினர். இளம்பிராய முதல், உலகத்தில் பரந்து கிடக்கும் பாஷையாகிய ஆங்கில மொழியை, குழந்தைகள் கற்றுக் கொண்டால், வாழ்க்கைப் போராட்டத்தில், ஏனையோர்களைக் காட்டிலும், அவர்களுக்கு லாபம் அதிகமாயிருக்கும் என்று, சொல்வன்மையுடனும் அன்புடனும், போலக் அவர்கள் என்னிடம் கூறுவார். ஆனால், இதனால் எனது மனம் மாறவில்லை. என்னுடைய மனோபாவம் சரியென்று மெய்ப்பித்தேனோ, அல்லது நான் பிடிவாதக்காரன் என்று என்னை அவர் விட்டுவிட்டாரோ, அது எனக்கு ஞாபகமில்லை. இது நடந்து சுமார் இருபது வருஷங்களிருக்கும். என்னுடைய அநுபவத்தை ஒட்டி, என்னுடைய நம்பிக்கைகளும் வளர்ந்து கொண்டே வந்திருக்கின்றன. என்னுடைய பையன்களுக்கு இலக்கியக் கல்வி, நிறைய இல்லாமற் போயினும், இயற்கையிலேயே அவர்களுக்குக் கிடைக்கப் பெற்ற தாய்ப் பாஷையின் அறிவு அவர்களுடைய நலத்திற்கும் நாட்டின் நலத்திற்கும் ஏற்றதாகும். ஏனெனின், தாய்ப்பாஷை அறிவு இல்லாவிட்டால், தங்கள் சொந்த நாட்டிலேயே அந்நியர்களாக இருக்கும் நிலைமை ஏற்பட்டிருக்குமன்றோ? இயற்கையிலேயே, அவர்கள் இரண்டு பாஷை கற்றுக் கொண்டார்கள். தினசரி வாழ்க்கையில், ஆங்கில நண்பர்களுடன் அவர்கள் மிகுதியும் பழகவந்ததாலும் சிறப்பாக ஆங்கில மொழி பேசப்பெறும் நாட்டில், எளிதிலே ஆங்கிலம் பேசி, எழுதக்கூடிய திறமை அவர்களுக்கு ஏற்பட்டது.

## யார் போதிப்பது?

திரு. கிருஷ்ணராவ் பான்ஸ்லே:—மேயோ அம்மையாரே! தங்களைப் போன்ற பிரயாணிகள் ஊர் சுற்றும் பொழுது திரட்டும் குப்பைகளைக்கண்டு, நாங்கள் வருத்தமடையோம். ஆனால், பசுவினிடமும் எருதினிடமும் இரக்கம் கொள்ளும்படி நீங்கள் போதிக்கவந்ததின் பொருள்தான் எங்களுக்குப் புலப்படவில்லை. இரண்டையும் இந்தியர் தெய்வமாகப் போற்றுகிறார்கள். அவற்றில் சில இளைத்தும் வியாதியுற்றும் கிடக்கின்றன என்பது உண்மைதான். ஆனால், அவற்றிற்காகத்தான் நாங்கள் பாடுபடுகிறோம்.

---

### கல்லுப்பட்டி.

திறப்புவிழா:—இவ்வூர் இராஜா ஸ்ரீ [illegible] பாட்மின்டன் திறப்புவிழா [illegible] அன்று காலை க மணிக்கு ஸ்ரீ [illegible] ஸ்கூல் உபாத்தியாயர் பிரம்மஸ்ரீ [illegible] யர் அவர்களின் தலைமையில் நடைபெற்றது. முதலில் கடவுள்வாழ்த்து சொன்னபின் சா. ஸ்ரீனிவாசன் கூறினபின்னர் ஸ்ரீமான் சா. சோமசுந்தரம் அவர்கள் வரவேற்புப் பத்திரம் வாசித்தார். தலைவரவர்கள் "உடற்பயிற்சி" யின் வன்மையைப்பற்றி மேல்நாட்டாரின் பல ஆதாரத்துடன் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். அதை ஆமோதித்து திருவாளர். பழ.ப. [illegible] செட்டியாரவர்கள் பேசிய [illegible] திருவாளர் ராம. கருப்பன் செட்டியாரவர்கள் சபையார் மனம் மகிழும்படி (இனியவையாக) "தேசபக்தி" யைப்பற்றி உள்ளக்கமாக உபந்யசித்தார்கள். தலைவரவர்கள் முடிவுரை கூறி முடித்ததும் ஸ்ரீமான் ராம. கருப்பன் செட்டியாரவர்கள் வந்தனோபசாரம் கூற, வந்திருந்தோர் அனைவருக்கும் சந்தனம் தாம்பூலம் கற்கண்டு [illegible] முதலியன வழங்கப்பெற்று, சுமார் கக-மணிக்குக் கூட்டம் கலைந்தது என ஒரு நிருபர் எழுதுகிறார்.

---

இரும்பும் எஃகும் துருப்பிடிப்பதால் உண்டாகும் அழிவினால், உலகத்துக்கு ஆண்டொன்றுக்கு ஏற்படும் நஷ்டம் [illegible] பவுன்கள் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

---

## பொருள் அடக்கம்.


| | |
|---|---|
| மலர்மணம்:—குறியும் செயலும். | ௧, ௨ |
| திருவாங்கூரில். | ௨, ௧௨ |
| வாரக்கடிதம். | ௩, ௪ |
| துணித் துறவு (படம்) | ௩ |
| ஒழிவு நேரம். | ௫ |
| தற்காப்பைக் கருதியே (படம்) | ,, |
| ஆளுக்குப்பாதி. | ௬ |
| சமத்துவ வாசகசாலை (பாட்டு) | ,, |
| ராஜீய லஞ்சமா? | ,, |
| காந்தியடிகளின் சரிதம். | ௭, ௯ |
| யார்போதிப்பது? (படம்) | ௯ |
| மதிப்புரை. | ௮ |
| தலையங்கம்:—நீலன் சிலை. | ௧௦ |
| உபதலையங்கம்:—வீண் கேள்விகள். | ௧௦, ௧௧ |
| இடிமுழக்கம். | ௧௧ |
| தந்தி. | ,, |
| உள்ளூர். | ,, |
| கப்பல். | ,, |
| அறிஞர் சங்கம். | ௧௨ |
| கடிதங்கள். | ,, |
| ஒரு பொதுக்கூட்டம். | ௧௩ |
| காந்தி கதர் நிதி. | ,, |
| அடிகளை வரவேற்க. | ,, |


ஊழியன்

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பாரதத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற்கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி
பிரபவ-ஞு ஐப்பசி-மீ ௧௩௨

## நீலன் சிலை.

பண்டைநாள் நீலன் என்னும் பெயரிய ஒருவன் இருந்ததாக நூல்களிற் படிக்கின்றோம். ஆனால் அவனுக்குச் சிலை யொன்றுமில்லை. சமீப காலத்தில் நீலன் என்னும் ஒரு சேனாதிபதி இருந்தானும். அவன் சென்னைத் தெருவில் இன்றும் சிலையாக நிற்கின்றான். அவன் கொடுமையே உருவானவன் என்பது நடுநிலை நின்று சரித்திர உலகை நோக்குவார்க்குத் தெரியாமற் போகாது. அம்மம்ம! அவன் செய்த கொடுமைகளைப் படிக்கும்பொழுது உள்ளம் துடிக்கின்றது! பழைய காலத்தில் கொடுமைகள் பல இழைத்ததாகக் கூறப்படும் எந்தப் போக்கனும் இக்கொடிய நீலனை வென்றவனாகக் காணப்படவில்லை. நீலன் குண்டுக்கு எவ்வித வேற்றுமையும் இருந்ததாகத் தெரியவில்லை. அவனுக்கு ஆணில்லை; பெண்ணில்லை. சிறியவனில்லை; பெரியவனில்லை. குழவியில்லை; கிழவனில்லை. நல்லவனில்லை; அல்லாதவனில்லை. ஒரேயடியாக எல்லோரையும் கொன்று குவித்தான் நீலன். நீல இராட்சதனோடு ஒப்பிட ஒருவாறு உயர் ஆக்கன் பொருந்துவனோ என்னவோ!

இக்கொடியோன் கொடுஞ்செயலை நினைவுறுத்திக்கொண்டு சென்னை நகர் பலைத்தெரு (மவுண்ட்ரோடு)வில் ஒரு சிலை நிற்கின்றது. இச்சிலையைத் தொலைக்கும் வினையில் சின்னாட்களாகச் சில பல நாட்டன்புள்ள இளைய வீரர்கள் முன்வந்துள்ளார்கள் என்பதை அன்பர்கள் அறிவார்கள். இதன் பொருட்டுப் பல தொண்டர்கள் சிறைக் கோட்டமும் சென்றுள்ளார்கள். இந்தியர்களை விணுகக்கொன்று குவித்த கொடியோன் சிலை ஏண்டு நிற்றல் தகாது; அதனை விட்டு வைத்தல் அவமானம் என அவர்கள் கருதுகின்றார்கள். இக்கருத்தில் என்ன பிழை? இன்னொருவனை வேறுபட இல்லையோ என்னவு தன் முறையின்று கைபற்றி எப்பொழுது உணர்ச்சி பெறுகின்றதோ அப்பொழுது அதற்கு செல்ல வேண்டு வருதான். மக்களின் உணர்வில் நீலன் கொடுமை தோன்றிய பிறகு அச்சிலையை வைத்துப் போற்றுதல் ஆகினாக் கழகன்று. நீல்சிலை பற்றிய சத்தியாக்கிரகம் ஒரு புறமிருக்க,

இச்சிலையைப் பற்றிச் சென்னைச் சட்ட சபையில் ஒரு தீர்மானம் எழுந்தது. அது தோற்கடிக்கப்பட்டு மாண்டொழிந்தது. சட்ட சபையிலிருக்கும் பெரும் பான்மையான இந்தியர்கட்குத் தேச உணர்வு எவ்வாறு இருக்கிறது என்பதை அளக்க இஃதும் ஒரு கருவியாகும். இத் தீர்மானத்திற்கு விரோதமாக நின்ற இந்தியர் செயலை என் சொல்வது? கொடுமை செய்த நீலன் ஏன் அங்கு இருத்தல் வேண்டும்? அவன் சிலையை எடுப்பதால் என்ன முழுகிப் போய்விடும்? வந்த தீர்மானம் வெகு எளிமையானதான் இருந்தது. அதற்குப் பண்டு இடமில்லை. அத்தீர்மானம் நீலனை அழித்துவிட வேண்டுமென்று கேட்கவில்லை. மறைவான இடத்தில் வைக்கும்படியே வேண்டிற்று. தீர்மானத்தின் கதி எவ்வாறாலும் தீர்மானம் பொருளுடையதாகவே இருக்கவேண்டும். அங்கிருப்பதை எடுத்து இன்னொரு இடத்தில் வைப்பதால் என் பயன்? கொடுமை செய்த நீலன் சிலையை உடைத்துக் கடலில் எறியும்படியன்றோ தீர்மானம் இருத்தல் வேண்டும்? தோற்பதென்பது எல்லாத்தீர்மானத்திற்கும் ஒன்றுதானே? தீர்மானங்கொணர்ந்த கூட்டத்தார்க்கு அதற்குத் தைரியமில்லை. இவ் வளவு எளிய தீர்மானத்தையும் இந்தியராய்ப் பிறந்தோர் எதிர்த்துத் தோற்கடித்தது மிகவும் இழிவு.

நீலன் சிலையை எடுக்கலாகாதென்பதற்குக் கூறப்பட்ட காரணங்களுள் பல அறிவோடு கூடினதாகக் காணப்படவில்லை. மார்ஜோரி பாங்ஸ் என்ற ரெவினியூ அங்கத்தவர் நீலன் செய்த நன்மை தீமைகளைப் பற்றித் தாம் ஆராயப் புகவில்லையென்றும் ஐம்பது அறுபது ஆண்டுகளாக இருக்கும் ஒன்றை இப்பொழுது ஏன் எடுக்கவேண்டும் என்றும் இயம்புகிறார். அதைப் பின்பற்றியே பின்னர் பலரும் பேசியிருக்கின்றார். அவன் சிலை இருக்கவேண்டும் என்பதற்கு வேறு விசேட காரணங்கள் யாரும் சொன்னதாகக் காணவில்லை. இக்காரணத்திற்கும் அறிவுக்கும் சிறு தொடர்பேனும் உண்டா என்பதை அன்பர்கள் ஆராய்வாராக! ஆண்டு பல கழிந்த ஒன்று அச்சிலையை ஊழிவரை நிலை நிறுத்தப்போகிறது போலும்! வெட்கம்! வெட்கம்!! அவன் செய்த நன்மை தீமைகள் தாம் ஆராயற்குரியன. நல்லனாயின் அவன் சிலையிருக்க வேண்டுவதுதான். தீயனாயின் தீயனென்று கண்டவன்றே அழிக்க வேண்டுவதைத் தவிர வேறென்? நாள் பல கடந்தமையால் அதைப்பற்றிப் பேசக்கூடாதென்பது நகைப்பிற்கே உரியதாகும். இக்கால இந்தியரின் முன்னோர்கள் அதற்குப் பொருள் கொடுத்திருப்பதால் அதை எடுக்கப்படாது என்று சிலர் விவாதித்திருக்கின்றார். இது விந்தையினும் விந்தை! அவர் எக்காரணம்பற்றிக் கொடுத்தார் என்பதை ஆராயவேண்டும். அன்றி அவர் இச்சிலையை விரும்பினார் என்றே வைத்துக்கொள்வோம். அதற்காக நாம் ஆதரிக்கவேண்டுமா? ஒரு அங்கத்தவர் "எங்கள் ஜில்லாவில் ஒருவரும் இச்சிலையை எடுக்க விரும்பவில்லை" யென்று கூறினாராம்! இதுதான் இவ்வளவினும் ரசமானவாதம்! வாய்மைகாத்த அரிச்சந்திரச் சக்கரவர்த்தியின் ஏழிற்றோன்றல் இவர்தாம்போலும்! ஒவ்வொருஜில்லாவிலும் எல்லாக்கருத்துடையாரும் இருப்பது இயல்பென்றும் இயம்ப வேண்டுவதில்லை.

மேலும் வகுப்புத்துவேஷத்தால் நீல்சிலையை எடுக்கவேண்டுமென்று விளம்புவதாகச்சிலர் செப்பியிருக்கின்றார். இது ஆதாரமற்றது. அது காரணமானால் சக்கரவர்த்தியுள்பட எல்லோருடைய உருவச்சிலையையுமன்றோ எடுக்கச்சொல்தல் வேண்டும்? நீலன் உருவச்சிலையை எடுக்கச் சொல்வதற்கு நீலன் செய்த கொடுமையே காரணம். அத்தீர்மானத்தை இந்தியரும் சேர்ந்து புறக்கணித்தது அறிவீனம்.

## வீண் கேள்விகள்.

ஜனசமூக ஊழியத்தில் ஈடுபட்டு, அல்லும் பகலும் அல்லற்பட்டு, கவலையுற்றுத் தவிக்கும் தலைவர்களைச் சில சோம்பேறிகள் சும்மாவிடுவதில்லை. தொண்டில் தலைசிறந்து விளங்கும் தேசபக்தர்களைப் பற்றித் திண்ணை வேதாந்தம்படிக்கும் வீணர்கள் வீண் அவதூறு பேசும் உரிமையை எவ்வாறோ அடைந்துவிடுகின்றார்கள். சதா காலமும் உழைக்கும் உத்தமனுக்கும் சோம்பிக்கிடக்கும்வீணனுக்கும்என்ன தொடர்பு என்று நமக்குத் தெரியவில்லை; எவருக்கும் தெரியாது என்றும் நாம் கருதுகின்றோம். ஏதேனும் ஒரு காரியத்தைத்துவக்கி, அதைச் செய்து முடிக்க எத்தனித்து, அதனாலுண்டான இலாப நஷ்டங்களை அறியாதவர்கள் நீதிபதிகளைப்போலத் தீர்ப்புச் சொல்லத்துணிவது எத்தகைய உரிமைபற்றி என்பது நமக்கு விளங்கவில்லை. ஒத்துழையாமையைத் துவக்கிய காலத்திலும், அந்த இயக்கம் ஓங்கி நின்ற காலத்திலும், அது சீர்குலைந்து போன காலத்திலும், காந்தியைப் பழி கூறத்துணிந்த மனிதர்கள் ஆயிரக்கணக்கானவர்கள். ஒத்துழையாமையை வெறுத்த அன்பர்கள் காந்தியைக் குறை கூறுவது ஒருவாறு பொருத்தமுடைத்து. ஆனால் காந்தி நடத்திய இயக்கத்தில் விருப்பும் வெறுப்புமின்றிக் கவலையில்லாமல், சோம்பலுக்குத் தொண்டு செய்து கொண்டுகிடக்கும் மாந்தர்தாம்கள் காந்தியை வீணான கேள்விகள் கேட்கும் உரிமையை எவ்வாறு பெற்றார்கள்?

வைஸிராய் அவர்கள் இப்பொழுது காந்தியை தில்லி நகரத்துக்கு, பேட்டிக்காக, அழைத்திருக்கிறார். ஒத்துழையாமைக்காரராகிய காந்தி, வைஸிராய் அவர்களை எவ்வாறு போய்ப் பார்க்கலாம் என்ற வீண் கேள்வி பலரின் உள்ளத்தில் உதயமாயிருத்தல் வேண்டும். அதனாலேதான், பம்பாயில் காந்தி போய் இறங்கியவுடன், அவரை ஒரு நிருபர் மேலே கூறப்பெற்ற கேள்வியைப் போல ஒரு கேள்வியைக் கேட்டிருக்கவேண்டும். காந்தி இதற்கு நன்றாகப் பதில்சொல்லியிருக்கிறார். "பொதுஜன விஷயங்களைப் பற்றி என்னிடமிருந்து ஏதேனுமறிய விரும்பி எவரேனும் எனக்கு அழைப்பு அனுப்பினால், அதை நான் மறுப்பதில்லை. மேலும் (இப்பொழுது வைஸிராய் அவர்களைப் பார்க்கப்போவதில்) நான் யாருடையவும் எந்த அமைப்பினுடையவும் பிரதிநிதியாகவும் செல்லவில்லை" என்று காந்திஜி தெளிவாகப் பதில் சொல்லியிருக்கிறார். இந்தப் பதிலை நண்பர்கள் ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

காந்தி என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக்கூடாது என்று புத்திமதி கூற, இந்தியாவில் யாருக்கு உரிமை உண்டு? இருவகை மனிதர்களுக்கு உரிமை உண்டு. காந்தியைப் போலத் தொண்டு செய்வதில் ஊக்கம் கொண்டு நாட்டுக்கு உழைத்து அனுபவமும் அன்பும் நிறைந்த உத்தம தேசபக்தர்கள் வினயத்துடனும் வணக்கத்துடனும் காந்தியைக் கேள்வி கேட்கலாம். இத்தகைய உரிமை அவர்களுடைய நாட்டுப்பற்றினாலும் அவர்கள் தொண்டாற்றியவகையினாலும் எழுந்ததாகும். காந்தியைப் போலக் கூரிய அறிவையும் நிறைந்த அன்பையும் திரளான அனுபவத்தையும் பெற்றவர்கள் காந்தியுடன் மாறுபட்டிருந்தபோதிலும், காந்திக்கு புத்தி கூறலாம். ஏனெனின் பெரியாரின் பிணக்கினால் நாட்டுக்கு யாதொருகேடும் விளையாது. மேலும் தொண்டில் சகோதரத் தன்மை கொண்டுவிளங்கும் உத்தமர்கள் காந்தியைத் தமது உடன் பிறந்த சகோதரராகப் பாவித்து, அன்பு முறையில் அவரிடம் சில உரிமைகளை எடுத்துக் கொள்ளலாம்.

இன்னொரு கூட்டத்தார் காந்தியைக் கேள்விகள் கேட்கலாம். ஐயம் நிகழ்ந்த காலத்தில், காந்தியைப் பின்பற்றி நடப்பவர்கள், தங்கள் சந்தேகம் தெளியுமாறு, காந்தியைக் கேள்விகள் கேட்கலாம். குறிப்பிட்ட ஒரு சமயத்தில், குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சி சம்பந்தமாக ஒரு தலைவன் செய்யும் காரியத்தின் பொருள் விளங்காமற் போயின், சீடர்கள் குருவைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். கூரிய மதி படைத்தவர்கள் அல்லது சளைக்காமல் பின்பற்றியவர்கள், காந்தியின் செயல்களைப்பற்றி ஆய்ந்து தீர்ப்புச் சொல்லும் பாத்தியம் படைத்தவர்களாவர். இதுதான் உலகத்தில், நன்மக்களால் பின்பற்றப்பட வேண்டிய பொது விதியாகும். ஆனால் நமது நாட்டிலோ, பொறுப்பில்லாமல் வீணர்கள் காந்தியை நாள்தோறும் பலநூறு கேள்விகளை நாகரிகமும் கூச்சமுமின்றிக் கேட்டு வருகின்றார்கள். இது எத்தகைய இயற்கை அல்லது அரிப்பு என்பதை எவரேனும் சொல்ல முடியுமா?

கேள்வி கேட்ட நிருபருக்கு, தாம் தனிமுறையில் போவதாக, காந்தி கூறிவிட்டார். அதாவது இந்தக் காலத்தில், அரசியல் சம்பந்தமாக தாம் என்ன செய்யவேண்டும் என்று கூற எவருக்கும் உரிமை இல்லை என்று காந்தி விளக்கமாக எடுத்துக் காட்டியிருக்கிறார். "நான் தலைமைப் பதவியை விட்டு விடவில்லை; ஆனால் என்னைப் பின்பற்றுபவர்கள் இல்லாமற் போனால், நான் என்ன செய்வது" என்று கோயமுத்தூரில் காந்தி பேசியிருக்கிறார். காந்தியின் நிலைமை எவ்வாறு இருக்கிறது என்று தெரிந்துகொண்டும், வீணர்கள் அனாவசியமான, பொருளற்ற, பொருத்தமற்ற கேள்விகளை உரிமையற்ற முறைகளில் கேட்கின்றார்கள். இத்தகைய விவேகமற்ற மனநிலை நமது நாட்டைவிட்டு அகல வேண்டும். பிறனைத் துன்பப்படுத்தும், அல்லது பிறனிடமிருந்து வேலை வாங்கும் உரிமையை மட்டும் நம்மில் பெரும்பாலர் வேண்டிநிற்கின்றார்கள். பிறனைப் பேணும் கடமையை நம்மில் எவரும் விருப்புடன் கொள்ளுவதில்லை. இத்தகைய போலி உரிமை உறவை வேண்டும் மக்களால் உலகத்தில் மகத்தான காரியங்களைச் செய்து முடிக்கமுடியாது.

மேலும் தலைவர்களின் பேரில் வீண் சந்தேகம் கொள்ளும் மனப்பான்மை நமது நாட்டில் மலிந்து கிடக்கின்றது. நமது தலைவர்கள் அதிகாரவர்க்கத்தினருடன் பேச்சு வார்த்தைகூட வைத்துக் கொள்ளக் கூடாதோ! நல்ல யோசனை! நமது தலைவர்கள் எளிதிலே ஏமாறக் கூடியவர்களானால், அவர்கள் அந்தப் பதவிக்குத் தகுதியுடையவர்களல்லர்; அவர்கள் நடத்தும், மற்றவர்கள் பின்பற்றும் இயக்கத்தில், போராட்டத்தில் வலிமை அதிகமிருக்காது. சந்தேக மனப்பான்மையினால், நபர்கள் வளரமாட்டார்கள்; அமைப்புகளும் சக்தியுடன் விளங்கமாட்டா; பெரிய இயக்கங்களும் மாண்டு போகும். இராவணனுடைய சிறைக்கோட்டத்திலிருப்பினும் சீதை கற்பிழக்கவில்லை என்ற நம்பிக்கை நம்மில் யாவருக்கும் இருக்குமாகில், நாம் நமது தலைவர்களைச் சந்தேகிக்கும் பாழான தீய பழக்கத்தை விட்டுத் தொலைத்துவிடுவோம். மனத்தில் மாசைக்கொண்டு, வெளிப்புறத்தில் அற்புத நிகழ்ச்சிகளை வேண்டி நிற்பது மடமையாகும். அவரையிலிருந்துதான் அவரை தோன்றும்; சக்தியினின்றும் தான் சக்தி தோன்றும். சந்தேகத்தினால் ஜன சமூகத்தில் நரகத்தை யொத்த குழப்பமும் கொடுமையும் தலை சிறந்து நிற்கும். நம்மில் யாவரும் சக்தியை விரும்புவோமாக!

## இடிமுழக்கம்.

### இலங்கை விஜயம்.

வைசிராயின் அழைப்புக்கிணங்கி, தில்லி சென்றிருக்கும் காந்தியடிகள், நவம்பர் இரண்டாந் தேதி வைசிராயுடன் பேசிவிட்டு, உடனே திருப்பி இலங்கைக்குச் செல்வார் என்று அறிகிறோம். குறைந்தது நவம்பர் ஏழாந்தேதி யேனும் உயர்ந்தால் பதினைந்தாந்தேதியாகிலும் இலங்கை போய்ச் சேர்வார். இதனால் இலங்கைச் சுற்றுப்பிரயாணம் தடைபடாது. எனவே, அடிகளை வரவேற்கும் முயற்சிகளை ஊக்கத்துடனேயேசெய்துகொள்ள இலங்கை நண்பர்களை வேண்டிக் கொள்கிறோம்.

### கதர் நிலைத்தது.

பம்பாயில் காந்தியடிகள் பேட்டி காணப்பட்ட பொழுது, சென்னை மாகாணத்திற்கு ஒரு நற்சாட்சி அளித்திருக்கிறார். சென்னைச்சுற்றுப் பிரயாணத்தால், அடிகளுக்கு ஏற்பட்ட பதிவு என்ன என்பதை நிருபர் கேட்டார். கதர் சம்பந்தப்பட்ட வரையில், எல்லாவிதத்தும் நல்ல உதவி கிடைத்ததாக, அடிகள் குறிப்பிட்டிருக்கிறார். மேலும், 'கதர் நிலைத்து விட்டது' என்று தாம் அபிப்பிராயம் கொண்டதாகவும், மகாத்மா கூறியுள்ளார். அடிகளின் மனத்தில் இத்தகைய பதிவு விழுமாறு நடந்துகொண்டது சென்னைக்கு ஒரு பாக்கியமேயாகும். ஆனால், வெற்றிகொண்டவன் செருக்கை அடைவனாயின், செயல் குறைய, தோல்வி ஓடிவரும். மகாத்மாவின் நற்சாட்சிப் பத்திரம் கிடைக்கப்பெற்ற சென்னை, அதற்கு எக்காலும் பாத்திரமாக நிற்கத்தளரா ஊக்கம் கொள்ளவேண்டும் என்பதே நமது விருப்பம்.

### நல்ல தீர்மானங்கள்.

முன்னே கூடிக் கலந்த ஒற்றுமை மகாநாடு மறுபடியும் சென்றவாரம் கல்கத்தாவில் திரு. சீனிவாச அய்யங்கார் தலைமையில் கூடியது. இந்துக்களும் முஸ்லிம்களுமாக சுமார் எழுபது அங்கத்தினர் விஜயம் செய்தார்கள். சிம்லாவில் நடந்த ஒற்றுமை மகாநாட்டில், நிகழ்ந்த கசப்பான விவாதங்கள் போன்ற யாதும் நிகழாது, அமைதியுடனும் பரஸ்பரம் விட்டுக்கொடுத்தும், இம் மகாநாடு நடைபெற்றிருப்பது இதைப் பாராட்டவேண்டிய அம்சங்களில் ஒன்றாகும். மதமாற்றம், மசூதி முன் சங்கீதம், பசு ஊர்வலம் என்ற மூன்று பிரச்சினைகளைப் பற்றியும் நிறைவேறியிருக்கும் தீர்மானங்கள், அமைந்த அறிவுக்கு ஒத்தவையாகும். நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களின்படி, இந்து முஸ்லிம்கள் நாமுழுவதும் நடக்கால், இந்து முஸ்லிம் வேற்றுமை முற்றும் ஒழிந்துவிடு மென்பதில் தடையில்லை. தீர்மானங்கள் இரு சமூகத்தினரிலும் எந்த சமூகத்தின் எந்த உரிமையையும் பிடுங்கி விடவில்லை. எனவே, தீர்மானங்களின் உட்பொருள் நாடு முழுதும் பரப்பப் படவேண்டும். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி இத்தீர்மானங்களை நிறைவேற்றியதோடு அமைந்து விடாது, இவற்றின் கருத்தை நாடு முற்றிலும் பரப்பிப் பரஸ்பர நட்பை வளர்க்க முயல வேண்டும், முயலும் என்றே நம்புகிறோம்.

### மதமாற்றம்.

மதம் என்பது ஆன்ம வேட்கையைத்தீர்ப்பதற்கு. ஒரு நபர் ஒரு மதத்தைத் தமதாக்கிக்கொள்ள, அதாவது ஒருமதத்தை தமக்குத் தேர்ந்தெடுத்துக் கொள்ள, அறிவுகொண்ட சிந்தனைவேண்டும். சிந்திக்கத்தக்க பக்குவம் பெற்றவனுக்குத் தான் மதமும் மதமின்மையும் உண்டு. சமயம் என்பது வெளிவேடமன்று; உள்ளத்தின் தேவையைத் தீர்ப்பதற்கான மதம், முழு உள்ளத்துடனும், முழுச்சிந்தனையுடனும் பற்றிக்கொள்ளப்படவேண்டும். அது வெளிக்கட்டாயத்தால் அல்லது ஏமாற்றத்தால் ஏற்படின், வெளிவேடமாகவே முடியும். எனவே, வெளிக்கட்டாயத்தால் அல்லது ஏமாற்றத்தால் மதமாற்றம் நடப்பின், மதமாற்றம் செய்விப்பவருக்கும் செய்துகொண்டவருக்கும் யாதும் பயனில்லை. மதமாற்றம் செய்விப்பவர் நோக்கில், தமது மதத்திற்கு ஒருவரை மாற்றிவிடுவதால், இறைவன் திருப்தி பெற்று விடுவான் என்பதாகும். அவரது தோற்றத்தை உண்மையெனவே வைத்துக்கொள்ளினும், வெளிவேடமதமாற்றத்தால் எல்லாம் வல்ல இறைவன், எங்ஙனம் திருப்தியடைவான்? எனவே, மதமாற்ற விஷயத்தில், வயதுவந்தவரை மட்டிலும், எவ்வித வலுக்கட்டாயமும் இல்லாது, அவருக்கு விருப்பமானால் மாத்திரம் மதமாற்றம் செய்யலாம் என்று, ஒற்றுமை மகாநாடு செய்திருக்கும் தீர்மானம் 'மதமாற்ற முயற்சிகள் கொண்ட' இந்து-முஸ்லிம்களை மட்டுமன்றி, பிறமதத்தவரது உள்ளத்தையும் கவரவேண்டும்.

### இரண்டு பிரச்சினைகள்.

இந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு இரண்டு பிரச்சினைகளுக்குப் பரிகாரம் காண்பது மிக முக்கியமாகும். வடநாட்டில் கலவரங்களையும் கலகங்களையும் விளைவித்துக் கொண்டிருப்பது இவ்விரண்டுமே. ஒன்று, மசூதிமுன் சங்கீதம்; மற்றொன்று, பசு ஊர்வலம். பரஸ்பர நல்லெண்ணம் மட்டும் இருப்பின் இவ்விரண்டும் மிக எளிதில் தீர்ந்து போகக் கூடியன. எதையும் பகைமைக் கண்ணுடன் பார்ப்பதாயின், எதனாலும் மனத்திருப்தி ஏற்படாது. இந்துக்கள், மதவிஷயமாகவும், இலௌகிகமாகவும் மசூதிமுன் சங்கீதத்துடன் செல்லலாம்; ஆனால், அங்கே நிறுத்தவாவது, விசேஷமாய் வாசிக்கவாவது கூடாது. முஸ்லீம்கள் பசுவதை செய்யலாம்; ஆனால், பகிரங்கப் பாதையிலாவது, கோவில்கட் கருகிலாவது, இந்துக்கள் பார்க்கத்தக்க இடத்திலாவது செய்தலாகாது. இவை ஒற்றுமை மகாநாட்டின் இரு தீர்மானங்கள். இரண்டு தீர்மானங்களும், பரஸ்பரம் இருவகுப்பாரது உரிமையையும் அவரவர்க்களிக்கின்றன. ஒரு சமயத்தவர் செய்யும் சமயக்கிரியைகள், அவரது மதப் பற்றை ஒட்டியவையாக இருக்க வேண்டும்; ஆனால், அவை பிறிதொரு சமயத்தவரது உள்ளத்தைப் புண்படுத்த வேண்டுமென்ற தேவையில்லை. இந்த உயர்ந்த கருத்துத்தான், இவ்வொற்றுமைத் தீர்மானங்களின் உட்பொருள்.

## தந்தி.

(ஊழியனுக்காக வந்த தந்தி)

ரங்கூன், பிரபவ ஐப்பசி-மீ ௧௩௨

| | |
|---|---|
| பவுன் (புதியது) | ௧௩-௧௦-௩ |
| டை பழையது | ௧௩-௧௦-௩ |
| நடப்பு வட்டி | ௦-௯-௩ |
| தவணை வட்டி | ௦-௯-௩ |
| படகு நெல் | ௧௮௫-௦-௦ |
| ரயில் நெல் | ௧௮௦-௦-௦ |
| ஸ்பெஷல் | ௪௯௦-௦-௦ |
| சிறியமில் அரிசி | ௪௩௦-௦-௦ |
| பெரியமில் | ௪௪௫-௦-௦ |
| மில்சார் அரிசி புழுங்கல் | ௫௪௦-௦-௦ |
| புழுங்கல் நசேன் | ௪௫௦-௦-௦ |
| ஏ. ஒன் குறுணை | ௪௦௫-௦-௦ |
| பீ. ஒன் ,, | ௯௭௦-௦-௦ |
| மிளகாய் | ௮௨-௦-௦ |
| மொச்சை | ௧௦௦-௦-௦ |
| தட்டை | ௫௦௦-௦-௦ |
| உளுந்து | ௪௭௫-௦-௦ |
| சிவப்புப் பீனிஸ் | ௨௪௫-௦-௦ |
| வெள்ளை பீனிஸ் | ௨௭௬-௦-௦ |
| புருத்திக்கொட்டை | ௯-௦-௦ |
| வெங்காயம் | ௧௨-௦-௦ |
| சோளம் | ௯௩௦-௦-௦ |
| கொள்ளு | ௪௫௦-௦-௦ |

## உள்ளூர்.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | ௦-௫-௦ |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | ௧-௪-௦ |
| பவுன் (பொற்காசு) | ௧௩-௯-௦ |
| வெள்ளி ரூபாயிடை | ௦-௯-௯ |

தட்ப வெப்ப நிலை:—

உயர்ந்த அளவு-௯௦

குறைந்த அளவு-௮௩

காங்கிரஸ் கதர் வஸ்திராலயம்:—உள்ளூரிலுள்ள காங்கிரஸ் காதிவஸ்திராலயத்தில் அக்டோபர் மாதத்தில் கதர் விற்பனையான தொகை சுமார் ரூ ௩௫௦ என்று மேற்படி வஸ்திராலயக் காரியதரிசி அறிவிக்கிறார்.

## கப்பல்

"ரோஷ்னு" கப்பல் இன்று சென்னைத் துறைமுகத்திலிருக்கிறது. நாளை புறப்பட்டு, நாகைக்கு வந்து, அங்கிருந்து இம் மாதம் ௨௩௨ ஞாயிற்றுக்கிழமையன்று மலாய் நாட்டுக்குப் புறப்படும்.

"எலிபண்டா" கப்பல் இன்றுசென்னைத் துறைமுகத்திலிருக்கிறது. இம்மாதம் ௧௩௨ வெள்ளிக்கிழமையன்று ரங்கூனுக்குப் புறப்படும்.

## "காதற் கடிதங்கள்"

### மதிப்புரை.

"லோகோபகாரி" எழுதுகிறது:—

காரைக்குடி ஊழியன் பத்திரிகாலயத்தார் வெளியிட்ட காதற்கடிதங்கள் என்ற நூல் வரப்பெற்றோம். தற்காலத்தில் நாவல்கள் என்ற பெயரால் வெளிவரும் நூல்களில் வெளிவரும் சில காமக் கடிதங்களைத் தவிர காதற் கடிதங்கள் என்ற பெயரால் இதுவரை ஒரு நூலும் வெளிவரவில்லை. தமிழிலே இது புது முறை. அதினிற் சிறந்தவரால் எழுதப்பட்டிருப்பதால் மிகவும் அழகாக அமைந்திருக்கிறது. தமிழ் மக்கள் படித்து இன்பமும் பயனும் அடையத்தக்க நூல்களில் இக் காதற் கடிதங்களும் ஒன்றாகும். இதில் காதலன் கடிதங்களும் காதலி கடிதங்களுமாக மொத்தம் நாற்பத்தாறு கடிதங்கள் அடங்கி யிருக்கின்றன.

### அப்துல் ரஷீதின் அப்பீல்.

சிரத்தானந்தரைக் கொலை செய்ததாக மரண தண்டனை விதிக்கப்பெற்ற அப்துல் ரஷீது பிரிவி கவுன்சிலுக்குச் செய்துகொண்ட அப்பீல் தள்ளுபடியாய்விட்டது.

## அறிஞர் சங்கம்.

மதுரை.

மேற்படி சங்கத்தின் ஆதரவில் சென்ற ௨௬-ம் ஞாயிற்றுக்கிழமை மாலை ௬-௩௦ மணிக்கு கனம் எஸ். சோமசுந்தரபாரதி அவர்கள், எம். ஏ. பி. எல்., அக்கிராசனத்தின் கீழ் திருநெல்வேலி ஜில்லா குலசேகரபட்டணம் திருவருள் எம். எஸ். வைரவநாதபிள்ளை அவர்கள் (சைவசித்தாந்த பண்டிதர்) "மனித உற்பத்தியும் அதன் காரணங்களும்" என்ற விஷயம்பற்றி ஓர் அரிய உபந்நியாசம் செய்தார்கள். மேற்படி உபந்நியாசகர் காக்ஷி அனுமான அளவைக்கொண்டும், உரைப்பிரமாணத்தை மேற்கொள்ளாமலுமே தம் கருத்துக்களை நிலைநிறுத்தப் போவதாய் முன்னுரைகூறி, புல் முதலாகிய ஓர் அறிவுயிர் முதல் ஆறறிவுயிராகிய மனிதன் வரை சர்வ ஜீவராசிகளும் உடல் உருவங்கள் வேறுபடுதலால் உயிர் ஒன்றாகவே யிருத்தலால், உயிர்நித்தியமென்று தெளியப்படுமென்றும், அவ்வுயிர் உடலோடு சம்பந்தப்படுமுன் அனாதியிலேயே மலத்தால் மூடப்பட்டு அறிவும், குணமுமின்றி தன் சமயமிழந்து இருந்ததென்றும், அப்படி மலத்தாற் கட்டுப்பட்ட உயிர்க்கு உடலொன்றைத் தானே தேடிக்கொள்ள முடியாதென்றும், உடல் சடப்பொருளானதால் அதுவும் உயிரைத் தானே தேடி அடையக்கூடியதில்லையென்றும், ஆகவே உடல், உயிர் இரண்டுக்கும் புறம்பாக உள்ள கடவுள் ஒருவரால் உயிருக்கு உடல் கொடுக்கப்பட்டிருக்க வேண்டுமென்றும், இவ்வாறு மனித உற்பத்தி கடவுளின் சிருஷ்டியென்று விளங்குமென்றும் கூறி, அந்தசிருஷ்டியின் காரணம் கடவுளின்லீலையென்றும், அவர் மகிமையைக் காட்டுவதென்றும், இப்பெரிய உலகத்தைப் பள்ளிக்கூடமாகவும், வைத்தியசாலையாகவும் அமைத்திருக்கிறரென்றும், மற்றும் பல வேறுபட்ட அபிப்பிராயங்கள் உண்டென்றும் கூறி தம் உபந்நியாசத்தை முடித்தார்.

பின்னர் கனம் எம். நாராயணசாமி அய்யர், பி. ஏ. பி. எல்., வி. எஸ். விஸ்வநாத அய்யர், பி. ஏ. காமாட்சிபிள்ளை முதலியவர்கள் பேசினார்கள்.

அதன்பின்னர் சபைத்தலைவர் உபந்நியாச விஷயத்தில் எழும் கேள்விகளுக்கு முடிவான சமாதானங்கள் ஒன்றும் தமக்குச் சொல்லச் சக்தி போதாதென்றும், பண்டைக்காலமுதல் இன்று வரையில் பல சமயத்தலைவர்களும், பல தத்துவ சாஸ்திரிகளும் இது சம்பந்தமான சந்தேகங்களுக்கும், கேள்விகளுக்கும், சமாதானங்கள் தேடிக்கூறி வருவதில், எல்லோரும் அங்கீகரிக்கத்தக்க முடிவு கண்டவர்களைக் காண்டல் அரிதாய் இருக்கிறதென்றும், எல்லா மதங்களும் உண்மையை அறியும் நன்னோக்கத்தையே உடையதாகையால் ஒன்றையும் குறைகூறலாகாதென்றும், அவைகளின் பல்வேறு கொள்கைகளைச் சமரசபாவமாக நடுநிலை அறிவோடு ஒத்துநோக்கி ஆராய்ந்து மெய்யியும் உண்மைகளைத் தெரிந்து கடைப்பிடிப்பதே மெய்யறிவும், நல்லறமுமாகுமென்றும் கூறி, சபையில் வந்திருந்த பல மதஸ்தர்களும் விசாரித்துத் தெளியவேண்டிய விஷயங்களைச் சில கேள்விகள் வடிவத்தில் தாம் எடுத்துச் சொன்னார்கள்.

இவைகளையும் இவைபோன்ற ஆன்ம விசார விஷய வினாக்களையும் விருப்புவெறுப்பின்றி நடுநிலையில் உண்மையை அறியும் ஒரே நோக்கத்தோடு ஆராயவேண்டியது அறிவுடைய மக்கள் ஒவ்வொருவரின் கடமையுமாகுமென்றுகூறியதலைவர்கடைசியாக, அக்கூட்டத்திற்கு வந்திருந்த வாலிப மாணவர்களை உபந்நியாசகர் மறுமையில் ஆன்மக்கள் அடையும் மோக்ஷ இன்பத்திற்கு இந்த உலகவாழ்க்கையில் மக்கள் அனுபவிக்கும், காமம், அறுசுவையாதி இன்பங்கள் மிச்சமாகுமென்று கூறியதைக் கொண்டு மோக்ஷத்திலும், உலகத்தைப்போலவே உயிர்கள் இன்பங்களை நுகர்ந்துகொண்டிருக்குமென்று கருதிவிடாமல் அதன் தத்துவத்தை ஆராய்ந்து சிந்திக்க வேண்டுமென்றும், மோக்ஷ ஆனந்தத்தைத் துன்பமற்ற தெய்வ இன்பமென்றே கொள்ளவேண்டுமே தவிர உலகத்திற்போன்ற துன்பமுற்றதென்று கொள்ளலாகாதென்றும், இதுவே வைதிக சித்தாந்தமதக் கொள்கையென்றும் கூறி முடித்தபின்மேல் வந்தனோபசாரத்துடன் கூட்டம் கலைந்தது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

---

## கடிதங்கள்.

### தேவகோட்டை.

தீபாவளி:—பிரபவ ஆண்டு ஐப்பசித் திங்கள் எட்டாம்நாள் தீபாவளிப்பண்டிகையை முன்னிட்டு இந்நகர் திருவாளர் சிமு. அரு. ராம. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் ஜாதிமத பேதமன்னியில் ஆயிரம் ஏழைகளுக்கு உணவும் உடையும் அளித்தது மிகவும் பாராட்டத்தக்தென ஒரு அன்பர் எழுதுகிறார்.

### சயிலா.

தென்னிந்திய சமரச சன்மார்க்க சங்கத்தின் கௌரவப் பிரசாரகர் அற்புதானந்த சுவாமிகள் புரட்டாதி ௨௭-ம் நாள் இங்கு வந்து ௨௮-ம் நாளிரவு ௮-மணி முதல் ௧௧-௩௦-மணிவரை ஐந்தறை மேல் வீட்டில் (மாஜிக் லாண்டர்ன்) புகைப்படக்காட்சி காண்பித்தார்கள். அவைகளில் கையில் இராட்டினம் தாங்கிய பாரதமாதாவின் திருவுருவமும், உலகிற் பெரியார் காந்தியடிகளின் திருவுருவமும் கன்மனத்தையும் கரையச்செய்தன. மறுநாள் மாலை ௪-மணி முதல் நாலறை மேல் வீட்டு குசப்பெருமான் சந்நிதானத்தில் திருவாளர் ராமன் செட்டியாரவர்கள் தலைமையில், "நமது இந்தியாவின் தற்காலநிலை" என்பதைப் பற்றி அற்புதானந்தா அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். பின்னர் சொ. நாராயணன் "கல்வி"யைப்பற்றிச் சிறிதுநேரம் பேச தலைவரவர்கள் முடிவுரை கூற, திரு. அழகப்ப செட்டியாரவர்கள் வந்தனங்கூற, ௬-௩௦ மணிக்கு இனிது நிறைவெய்தியது. அப்பால் வடலூரில் தைப்பூசத்தினத்தன்று ஓர் பெரும் மகாநாடு கூட்டி விழாநடத்தி இராமலிங்க சுவாமிகளின் அரும்பெரும் சமரச சன்மார்க்கக் கொள்கைகளை நாடெங்கும் பரப்புவதற்காக அற்புதானந்தா அவர்கட்கு இவ்வூர் நகரத்தாரவர்கள் ரூ ௭௫ உதவியுள்ளார்கள் என்று சொ. நாராயணன் எழுதுகிறார்.

### நன்கொடை.

சிராவயல் ஸ்ரீகாந்திவித்தியாலய மாணவ மாணவிகட்கு தீபாவளிக்கு ஆடைக்காக திரு. வயி. சு. சண்முகம் செட்டியார் அவர்கள் ரூ ௩௦-ம் உணவுக்காக சிராவயல் திரு. மு. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் ரூ ௭-ம் அன்புடன் அளித்தார்கள். அன்பர்கள் இருவருக்கும் ஏழைக்குழந்தைகளின் சார்பாக எமது நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகின்றோம் என்று திரு. கு. கும்பலிங்கம் எழுதுகிறார்.

### கழனிவாசல்.

நிகழும் பிரபவ ஆண்டு ஐப்பசித் திங்கள் ௮-ம்நாள் திங்கட்கிழமைமாலை ௪-மணிக்கு கழனிவாசல் ஆதித்திராவிடர் கோயில் முன்பாக ஓர் கூட்டம் கூடிற்று. கூட்டத்திற்கு "இராமநாதன் கலாசாலை" ஆசிரியர்களும், திரு. மெ. ராம. மெய்யப்ப செட்டியார், சொக்கலிங்கம் செட்டியார் முதலிய பல செட்டிமார்களும் வந்திருந்தனர். பலர் வேண்டுகோட்கிணங்கி திரு. மெ. ராம. மெய்யப்ப செட்டியார் தலைமை வகித்தனர். அவ்வமயம் திரு. ரா. பாலசுப்பிரமணியம், ஆ. சுப்பையா, ராமகிருஷ்ணன், குமாரசுவாமி ஆகிய நால்வரும், ஆதித்திராவிடர் முன்னேற்ற வழியைப்பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். கட்குடியையும், மாட்டுமாமிசம் சாப்பிடுவதையும் உடன் நிறுத்திவிட வேண்டுமென்றும், எப்பொழுதும் சீராடிச் சுத்தமாயிருக்க வேண்டுமென்றும், அவர்கள் பிள்ளைகளைத்தவறாது பள்ளிக்கனுப்ப வேண்டுமென்றும், அவர்கள் பேச்சிற்குறிப்பிட்டார்கள். பின்னர் தலைவர் முடிவுரையாகத் தாம் ஆதித்திராவிடர் முன்னேற்றத்திற்காகத் தம் உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தம் செய்யத் தயாராயிருக்கிறதாகவும், அவர்கள் நல்வழிப்பட்டு ஒழுகி மற்றவகுப்பாரால் எள்ளப் படாதவாறு முன்னேற வேண்டுமெனவும் அவர்கள் பிள்ளைகளை "இராமநாதன் கலாசாலை"க்குத் தவறாது அனுப்புவதே தமக்கு அவர்கள் செய்யும் பேருதவியெனவும் கூறினார்கள். சுமார் ௬-௩௦ மணிக்கு, கடவுள் வணக்கத்துடன் கூட்டம் கலைந்தது என்று "முருகவேள்" எழுதுகிறார்.

---

## திருவாங்கூரில்.

(௨-ம் பக்கத் தொடர்ச்சி.)

பிராமணப் புரோகிதர்கள், வைக்கம் சத்யாக்கிரகத்தினால் புத்திபெறவில்லை. இந்துக்களில் மேல்வகுப்பினர்கள் சீர்திருத்தத்தை விரும்பினால், இந்தக்கொடுமையை ஒழிக்க, கட்டுப்பாடான ஒரு கிளர்ச்சியைச் செய்யுமாறு, காந்தியடிகள் தமது ௧௯௨௪-ம் ஆண்டுச் சுற்றுப்பிரயாணத்திலேயே வேண்டிக் கொண்டார். அவர்கள் தூங்கிக்கொண்டிருந்தார்கள். தொண்டர்கள் குறைவாக இருந்ததினாலேயே "அவர்ண" இந்துக்கள் துன்புற்று வந்தார்கள். ஆகையினால், இவர்கள் யாவரையும் நோக்கி, காந்தியடிகள் தமது பிரசங்கங்களில் கூறினர்.

நாகர்கோவிலில் நிகழ்த்தப்பெற்ற முதற் பிரசங்கத்தில், திருவாங்கூரிலுள்ள தீண்டாமையை இடித்துக்கூறியதுடன் நிலைமையைப்பற்றி பொதுவாக ஆராய்ந்தும் உரைத்தார். காந்தியடிகள் மகாராணியைப் பார்த்த பிறகு, திருவனந்தபுரத்தில் இரண்டாவது பிரசங்கத்தைச் செய்தார். இந்துமதத்தின் உட்கருத்தை ஆராய்ந்து விளக்கப்பெற்ற உரையாகும் அது. இந்து சமஸ்தானங்களுக்கும், அவ்வாறே இந்துப்பிரஜைகளுக்கு அது நலம் பயப்பதாகும். சாஸ்திரமுறையில் சத்யாக்கிரகத்தைப்பற்றி ஆராய்ந்தும் அதில் கூறப்பெற்றுள்ளது. சத்தியாக்கிரகம் செய்ய வேண்டுமெனத் தீவிர ஆவல் கொண்டிருப்பவர்களுக்கு அதுபயன்தருவதாகும். கொல்லத்தில் மேல் வகுப்பு இந்துக்களுக்குக் காந்தியடிகள் செய்த வேண்டுகோள், உணர்ச்சியும் எழுச்சியும் கொண்டதாயிருந்தது. நான்காவதும் கடைசியுமான பிரசங்கம் அல்லப்பியில் செய்யப்பெற்றது. ஈழவப் பிரதிநிதிக் கூட்டத்தைச் சந்தித்த பிறகு அது நிகழ்த்தப்பெற்றதால், அவர்களுக்கு ஒரு உறுதியை அளிப்பதாகவும் அரசாங்கத்துக்கு ஒரு எச்சரிக்கையாகவுமிருந்தது.

கதர் வேலையைப்பற்றியமட்டில், வசதிகள் அநேகமிருக்கின்றன. ஆனால், நடக்கும்வேலையோ பூஜ்ஜியமாயிருக்கிறது. அநேக இடங்களில் அளிக்கப்பெற்ற பண முடிப்புக்கள் அவற்றின் தகுதிக்கு ஏற்றனவல்ல. திருவாங்கூரில் மிக முக்கியமான துறைமுகப் பட்டினம் அல்லப்பி. (இடையே ஒருவார்த்தை. அங்கே திரு. சுவுரோஜி நேரியல்வாலா, எங்களை அன்புடன் விருந்தினராக ஏற்று உபசரித்தார்.) அங்கே ௪௨௦ ரூபா அடங்கிய ஒருபணமுடிப்புத்தான் அளிக்கப் பெற்றது என்பதை யோசித்துப் பாருங்கள்! ஈழுவர்களின் ௪௦௦ ரூபா அடங்கிய பணமுடிப்பு இதைவிட மிகவும் மெச்சத்தக்கதாகும்.

உண்மையிலே, பொதுஜனத் தொண்டு உணர்ச்சி திருவாங்கூரில் மிக அற்பமாயிருக்கிறது. தேசீய இயக்கம் ஒன்றுக்குத் தாராளமாகப்பணம் அளிக்கும் வழக்கத்தை மிகச் செல்வவந்தர்களான ஜனங்கள்கூடக் கற்றுக்கொள்ளவில்லை.









## ஒரு பொதுக்கூட்டம்.

தேவகோட்டையில் பொதுஜன மகாநாடு ஒன்று ௧௯—௧௦—௨௪௨ மாலை ௫-மணிக்குக் கூடியது. எல்லா ஜாதியாரும் ஏராளமாகக் கூடினார்கள். எல்லாராலும் ஏகோபித்து மகா-ள-ள-ஸ்ரீ அள. அரு. நாராயணன் செட்டியார் (எம். எல். ஸி) அவர்களை இந்த மகாநாட்டுக்குப் பிரஸிடெண்டாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாய் நிறைவேறின:—

(க) இந்த ஊர் பார் அசோசியேஷனில் பிராமணர்களே மெம்பர்களாக இருக்கிறார்கள். அவர்களில் சுமார் ௪௦ பேர்களுக்கு உட்பட்டவர்களுக்குத்தான் சொந்த வீடு இவ்வூரில் இருக்கிறதாகத்தெரிகிறது. அவர்களுக்கு வரிப்பளுவின் சிரமங்களைப்பீடிக்காதென்று நினைத்து, பொதுஜனங்களின் நன்மைகளுக்கும் அபிப்பிராயத்துக்கும் விரோதமாக இவ்வூரை முனிஸிபாலிட்டி ஆக்கவேண்டுமென்று தீர்மானித்திருப்பதை இந்த மகாநாடு கண்டனம் செய்கிறது.

(உ) இந்த நகரத்துக்கு இப்போது இருக்கிற யூனியன் போர்டு வரும்படிகளே இந்த ஊர் சுகாதாரம், லைட்டு முதலியவைகளையும் வசதி பண்ணிக்கொள்ளப் போதுமானதாக இருப்பதுடன் சுமார் ரூ. ௧௫௦௦௦ வரை மீதம் இருப்பதாயும் தெரிகிறது. அப்படியிருக்க, இந்த ஊருக்கு முனிஸிபாலிட்டி தேவையில்லை என்று இந்த மகாநாடு தீர்மானிக்கிறது.

(ங) இப்போது இந்த யூனியன் போர்டில் ஏற்பட்டிருக்கிற வரிகளையே பொதுஜனங்களுக்கு நிரம்ப அதிகமான பளுவாக ஏற்படுத்தியிருப்பதைக் குறைக்கவேண்டுமென்று இந்த மகாநாடு தீர்மானிக்கிறது.

(ச) இந்தத்தீர்மானங்களின் காப்பிகளை யூனியன் போர்டு, தாலூகாபோர்டு, டிஸ்டிரிக்ட்போர்டு, கவர்ன்மெண்டு, டிப்டிதாசில்தார் அவர்கள், டிவிஷனல் ஆபீசரவர்கள் டிஸ்டிரிக்டு கலெக்டர் அவர்களுக்கு அனுப்பவும் பிரஸ்களுக்கு அனுப்பவும் தீர்மானிக்கலாயிற்று என்று மேற்படி மகாநாட்டுத் தலைவர் எழுதுகிறார்.

---

### தலைவசிய இளைஞர்தமிழ்ச்சங்கம்.

(பர்மா)

புரட்டாதிமீ பதினாறாம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலை நான்கு மணிக்கு நம் சங்கத்தில் ஓர் கூட்டம் கூடப்பெற்றது. அதுகாலை நடராசருக்கு தூபதீபாராதனை நடத்தப்பெற்று திரு. லெ. மு. நா. முத்தரசப்ப செட்டியாரவர்கள் (தாயுமானவர்) தலைவர் ஆசனத்தமர சங்க இளைஞர்களால் கடவுள் வாழ்த்துக் கூறப்பெற்று, வீரம் வேண்டும், கல்வியும் கைத்தொழிலும், கல்வி, கல்வியின் பயன், செல்வம் நிலையாமை, பெரியோரை வழிபடல், சரீர சௌக்கியம், மெய்மை, கைத்தொழில், தீபாவலியும் கதரும், கள்ளாமை, யாக்கையின்பலன் ஆகிய விடயங்களை முறையே கரு. ஆவுடையப்பன், வீர. சொக்கலிங்கன், மெ. மாணிக்கன், நாக இலக்குமணன், சிவ. இராமநாதன், சா. மெய்யப்பன், சோம. சோம. சேதுராமன், அண. இராமநாதன், இராம. அண்ணாமலை, இராம. சோமசுந்தரன், சுப்பய்யா, இராம. அருணாசலன், ஆகிய அன்பர்கள் சொற்பெருக்கிட்ட பின்னர், தலைவரவர்கள் முடிவுரை வழங்க, மங்கலவாழ்த்துடன் அவை ௭ மணிக்குநிறைவெய்தியது புரட்டாதிமீ இருபத்து மூன்றாம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலை நான்குமணிக்கு திருவாளர் மு. சாத்தப்பசெட்டியாரவர்கள் தலைமையில் ஓர்கூட்டம் கூட்டம் கூடப்பெற்றது. அதுகாலை பல அன்பர்கள் பலவிடயங்களைமுறையேசொற்பெருக்கிட ௭இமணிக்குஇனிது நிறைவெய்தியது. சிரஞ்சீவி இரா ம. சோமசுந்தரன் ௨௭-ம் நாள் விடுமுறையில் தாய்நாடு வருவது கருதி ௨௮-ம் நாள் வியாழக்கிழமை மாலை ௪இ-மணிக்கு திருவாளர் லெ மு. நா. முத்தரசப்ப செட்டியாரவர்கள் (தாயுமானவர்) தலைமையில் ஓர் கூட்டம் கூடப்பெற்றது. அதுகாலை சிற்றுண்டி முதலியன வழங்கப்பெற்று, பல அன்பர்கள் அன்னார் நம்சங்கத்திற்குச் செய்துள்ள அரும்பெருந்தொண்டுகளைப்பற்றிச் விரிவாகக் கூற, மாலை முதலியன அளிக்கப்பெற்ற தலைவரவர்களின் முடிவுரையுடன் அவை ௭இமணிக்குஇனிது நிறைவெய்தியது என்று மேற்படி சங்கக் காரியதரிசி எழுதுகிறார்.

---

## காந்தி கதர் நிதி.

சில்லறைவசூலுக்கு விபரம்.

"ஊழிய"னின் சென்ற இதழில் வெளியான தனவணிக நாட்டு, காந்தி கதர்நிதிக் கணக்கில் சில்லறை நன் கொடை என்று குறிக்கப்பட்டிருந்த ரூ ௨௨௪-௧௦-௦-க்கு விபரம் வருமாறு:—

காரைக்குடி.

| | | |
|---|---|---|
| பிச்சு அய்யர் | ௧ | ௦ |
| கனகசபாபதிக் குருக்கள் | ௦ | ௮ |
| மெ. கதிரேசன் செட்டியார் | ௨ | ௦ |
| கடியாரக்கடை கே. குப்பமுத்து சேருவை | ௧ | ௦ |
| கா. மாணிக்கம் பிள்ளை | ௦ | ௮ |
| நாகரெத்தினம்பிள்ளை | ௦ | ௪ |
| ரைஸ்மில் கு சந்திரன் செட்டியார் | ௦ | ௮ |
| ராம. நாராயணன் செட்டியார் | ௦ | ௪ |
| அ. நாகலிங்கம் பிள்ளை | ௦ | ௪ |
| கண்ணையா செட்டியார் | ௧ | ௦ |
| பொசல வேளார் | ௧ | ௦ |
| நாகசாமி அய்யர் | ௦ | ௮ |
| தெண்டாயுதம் செட்டியார் | ௦ | ௮ |
| ஆ. கணபதி அய்யர் | ௦ | ௪ |
| அ. இராமஸ்வாமி அய்யர் | ௦ | ௮ |
| சு. முத்தய்யா பிள்ளை | ௦ | ௪ |
| வெள்ளிவேலை ராஜு பிள்ளை | ௦ | ௮ |
| த. குமாரசாமி செட்டியார் | ௧ | ௦ |
| வி. சாமிநாதய்யர் | ௦ | ௧௦ |
| இ. சையது இபுராகிம் | ௦ | ௪ |
| சில்லறை இனங்கள் | ௦ | ௮ |
| நா. ஆறுமுகம் பிள்ளை | ௦ | ௪ |
| ராமஸாமி பிள்ளை | ௦ | ௮ |
| குருமூர்த்தி | ௧ | ௦ |
| சாத்தப் பிள்ளை | ௨ | ௦ |
| வைத்தியர் ராமன் பிள்ளை | ௦ | ௮ |
| நடேச பிள்ளை | ௦ | ௪ |
| சு. ந. அ. மார்க்கண்டன் செட்டியார் | ௧ | ௦ |
| ஆர். அய்யாமணி அய்யர் | ௧ | ௦ |
| ராமகிருஷ்ணய்யர் | ௫ | ௦ |
| ஒரு நண்பர் | ௧ | ௦ |
| நடராஜன் செட்டியார் | ௦ | ௪ |
| T. K மீனாக்ஷிசுந்தரம் | ௧ | ௦ |
| S. K. V. E. வைரவபிள்ளை | ௧ | ௦ |
| அப்துல்லாராவுத்தர் | ௧ | ௦ |
| ஸ்ரீநிவாஸன் | ௨ | ௦ |
| ராமகிருஷ்ணன் போற்றி | ௦ | ௮ |
| K. P. பழனியப்பன் | ௧ | ௦ |
| நாராயணன் நாயர் | ௦ | ௮ |
| ஒரு நண்பர் | ௧ | ௦ |
| N. K. நாராயண ஆசாரி | ௫ | ௦ |
| அய்யாவு செட்டியார் | ௦ | ௮ |
| வீரபத்திரன் செட்டியார் | ௦ | ௮ |
| R. அய்யாமணி அய்யர் | ௨ | ௦ |
| மோ. சொ. ராமஸாமி செட்டியார் | ௨ | ௦ |
| சா ஆறுமுகம் பிள்ளை | ௦ | ௮ |
| நடேசன் | ௦ | ௮ |
| ராமஸாமி செட்டியார் | ௦ | ௮ |
| ம ராமய்யா | ௦ | ௮ |
| மு இ பெரியணன் செட்டியார் | ௧ | ௦ |
| K V கோபாலகிருஷ்ணய்யர் | ௦ | ௪ |
| சாமு ராவ் | ௦ | ௮ |
| மு கண்ணாயிரம், ஊழியன் ஆபீஸ் | ௦ | ௪ |
| ஆனா சேக்மகமது | ௦ | ௪ |
| S ராமய்யர் | ௧ | ௦ |
| T V S & sons | ௫ | ௦ |
| S S M C/o A V & பிரதர்ஸ் | ௧ | ௦ |
| S V Moorthy | ௨ | ௦ |
| M கிருஷ்ணமாச்சாரி அய்யங்கார் | ௧ | ௦ |
| K அண்ணாஸாமி அய்யங்கார் | ௨ | ௦ |
| கோபால்சாமி & Brakirs | ௧ | ௦ |
| P பட்டாபி | ௧ | ௦ |
| V ராஜகோபால் | ௧ | ௦ |
| அ வெ தியாகராஜா | ௫ | ௦ |
| சு வடிவேலுபிள்ளை | ௧ | ௦ |
| கோவிந்தபிள்ளை | ௧ | ௦ |
| பொசலான் | ௧ | ௦ |

| | | |
|---|---|---|
| முத்துராமபிள்ளை | ௧ | ௦ |
| தி வேலப்பன் | ௧ | ௦ |
| த கிருஷ்ணன் | ௧ | ௦ |
| ரெங்கஸாமிபிள்ளை | ௬ | ௦ |
| ராமன் பிள்ளை | ௧ | ௦ |
| முத்துக்கருப்பன் | ௧ | ௦ |
| செல்லையாபிள்ளை | ௧ | ௦ |
| அருளாண்டி | ௧ | ௦ |
| சின்னையா | ௧ | ௦ |
| ராமநாயகர் | ௧ | ௦ |
| கிருஷ்ணஸாமி | ௧ | ௦ |
| சா கோவிந்த ஆசாரியார் | ௨ | ௦ |
| ராம மீ கோபாலு பத்தர் | ௩ | ௦ |
| குமாரஸாமி பத்தர் | ௧௦ | ௦ |
| வை வேதாந்தம் ஆசாரி | ௧ | ௦ |
| மு வ வடிவேலாசாரி | ௧ | ௦ |
| நா முத்தய்யா பிள்ளை | ௨ | ௦ |
| அ கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரியார் | ௩ | ௦ |
| ஜெ நா முத்துகிருஷ்ணபத்தர் | ௫ | ௦ |
| த ராமகிருஷ்ண விசுவகர்மன் | ௫ | ௦ |
| பெ மா கோபாலாச்சாரியர் | ௧ | ௦ |
| சு மகாராஜா ஆசாரி | ௧ | ௦ |
| சி மாணிக்கம் சேருவை | ௧ | ௮ |
| கா அழகு ஆசாரியார் | ௨ | ௦ |
| சா சுப்பய்யா ஆசாரி | ௧ | ௦ |
| கா முத்தாண்டவபத்தர் | ௧ | ௦ |
| ஜெ கா சுந்தரபத்தர் | ௧ | ௦ |
| ப வ சுந்தரப்பத்தர் | ௧ | ௦ |
| வ முத்தய்யா ஆசாரி | ௧ | ௦ |
| சு ஆறுமுக ஆசாரியார் | ௧ | ௦ |
| தெ குட்டியப்ப செட்டியார் | ௨ | ௦ |
| அ செ சுப்பிரமணியன் சேருவை | ௧ | ௦ |
| நா அ கா ரெத்தினம் செட்டியார் | ௧ | ௦ |
| பொன்னம்பலாச்சாரியார் | ௧ | ௦ |
| வெ ராமஸாமி ஆச்சாரியார் | ௧ | ௦ |
| பத்மநாபன் | ௧ | ௮ |
| க வெ சித சோலையன் | ௦ | ௪ |
| ச சக்திவி செட்டியார் | ௧ | ௦ |
| சேனிய முத்தய்ய செட்டியார் | ௧ | ௦ |
| சுந்தரசெட்டியார் | ௦ | ௮ |
| இராஜா செட்டியார் | ௦ | ௪ |
| ராம நாகலிங்கம் ஆசாரி | ௧ | ௦ |
| (ஒரு தெலுங்க நண்பர்) | ௧ | ௦ |
| ராம கிருஷ்ண அய்யங்கார் | ௬ | ௮ |
| தம்பண்ணா நாயுடு | ௧ | ௦ |
| ஆ கு ம கருப்பனம்பலம் | ௨ | ௦ |
| க மு க கறுப்பப்ப செட்டியார் | ௧ | ௦ |
| வெத்திலைக்கடை நாயுடு | ௦ | ௪ |
| செல்லையா பிள்ளை | ௦ | ௪ |
| மாணிக்கம் செட்டியார் | ௦ | ௪ |
| ஸ்ரீ ராமமூர்த்தி | ௦ | ௪ |
| கிருஷ்ணன் செட்டியார் | ௦ | ௪ |
| முகமதுமீரா ராவுத்தர் | ௦ | ௪ |
| பொன்னையா பிள்ளை | ௦ | ௪ |
| தாண்டவ செட்டியார் | ௦ | ௪ |
| சேஷாபாய் | ௦ | ௪ |
| கு வெ வெங்கடாஜலம் பிள்ளை | ௦ | ௪ |
| சிவப்ரதாஸ் | ௦ | ௪ |
| சிதம்பரம் செட்டியார் | ௦ | ௪ |
| ராம மு வீ மெ வீ சிதை ஆச்சி | ௧ | ௦ |
| ராம மு வீ வெ. கா உமையாளாச்சி, வெகாசிவிஸ்வநாதன் செட்டியார் (இருவர்) | ௫ | ௦ |
| அ தெ மு தெ விசாலாட்சி ஆச்சி | ௧ | ௦ |
| ர ம மு வீ வெ மீனாக்ஷி ஆச்சி | ௧ | ௦ |
| ராம மு வீ மெ சிட்டாளாச்சி | ௧ | ௦ |
| பனா மெ சு | ௫ | ௦ |
| மு சிவ மெ சிவ சிவராமன் செட்டியார் | ௩ | ௦ |
| ஆ வெ மெ மெய்யப்ப செட்டியார் | ௩ | ௦ |
| மு வீ சு ர சுப்பிரமணியன் செட்டியார் | ௨ | ௦ |
| சு மு ராம முத்துராமன் செட்டியார் | ௪ | ௦ |
| ராம மு வெ சோமசுந்தரம்செட்டியார் | ௩ | ௦ |
| ப மெ மெ அருணாசலம் செட்டியார் | ௧ | ௦ |
| சேவு ச சேவுகஞ் செட்டியார் | ௫ | ௦ |

## அடிகளை வரவேற்க.

கண்டியில் ஏற்பாடு.

(சமதர்சிருபர் எழுதுகிறர்)

சாலிவாகன புரட்டாதிமீ ௩௦-உ மத்யானம் ௨ மணிக்கு ஸ்ரீ புண்ய சம்பாதின மண்டபத்தில் சம்பன்ன ஸ்ரீமான் பழ. மு. இலக்குமணன் செட்டியார் அவர்கள் தலைமையில் அகில இலங்கை இந்தியர் காங்கிரஸ் கூடிற்று. அந்த மண்டபம் முழுதும் ஜனங்கள் நிறைந்திருந்தனர். தலைவர் முகவுரைப் பிரசங்கம் மிக அழகாகப் பேசினர். சிறிது நேரம் ஆங்கிலத்தில் பேசினர். காரியாலயத்தில் ஆலோசனைக் கூட்டத்தில் செய்த தீர்மானங்களைத் தலைவர் வாசித்ததும், ஜனங்களின் ஏகமனதான அபிப்பிராயங்கொண்டு தீர்மானங்கள் நிறைவேறின. மகாத்மா அவர்களை வரவேற்க ஏற்படுத்தும், கமிட்டியில் இலங்கை வாசிகளையும், சேர்த்துக் கொள்வதென்ற தீர்மானம், குறிப்பிடத்தக்கது. பிறகு மகாத்மா அவர்களைப் பற்றியும், வரவேற்க வேண்டிய முறைகளைப் பற்றியும், கதர் நிதிக்குப் பணம் கொடுக்க வேண்டிய அவசியத்தைப்பற்றியும், ஸ்ரீமான்களான பி. பி. நாவலே எம். எல். சி., ஜியார்ஜ் டி. சில்வா, ஆம்பிலேப கவுன்சிலர் காக்ஸ், பெரி சுந்தரம், பிச்சப்பா, சுப்பிரமணியன் ஆகியவர்பேசினார்கள். தலைவர்கள் மிக உருக்கமாகப் பேசினார்கள். கூட்டம் ௫இ மணிக்கு உற்சாகமாக முடிந்தது. அக்கூட்டத்திலேயே, கதர் நிதிக்குச் சில அன்பர்கள் பொருள் (ரு ௧௪௦௦) உதவினார்கள்.

---

எறும்பின் வயது.

சாதாரணமாக எறும்பின் சராசரி வயது எட்டு ஆண்டு. ஆனால் பிடித்து வைத்துப் பார்க்கப்பட்ட சில ஜாதி எறும்புகள் பதினேழு ஆண்டுகள் வரை உயிரோடிருந்தனவாம்.

---

| | | |
|---|---|---|
| முரு சப ராம முருகப்ப செட்டியார் | ௩ | ௦ |
| சித நா லெ லெட்சுமணன் செட்டியார் | ௩ | ௦ |
| ராம மு வீ லெ மெ மீனாக்ஷி ஆச்சி | ௧ | ௦ |
| மு கரு சோம சோமசுந்தரம் செட்டியார் | ௨ | ௦ |
| ராம மு வீ மெ விஸ்வநாதன் செட்டியார் | ௨ | ௦ |
| மு மாணிக்கம் செட்டியார் | ௪ | ௦ |
| ராம சா ராம சா நாச்சம்மை | ௧ | ௦ |
| ஆறு ஆ ராம ராமஸாமி செட்டியார் | ௫ | ௦ |
| சி செசுந்தரன் பிள்ளை | ௧ | ௦ |
| **கழனிவாசல்.** | | |
| நா. க. கிருஷ்ணய்யங்கார் | ௦ | ௪ |
| கா பழனி | ௧ | ௦ |
| கா காளிமுத்து | ௧ | ௦ |
| **தேவகோட்டை.** | | |
| D L நாகசுந்தரமய்யர் | ௧ | ௦ |
| **ஜெயங்கொண்டபுரம்.** | | |
| ம கு குப்புஸாமிபிள்ளை | ௫ | ௦ |
| **முத்துப்பட்டணம்.** | | |
| சின்னான் | ௧ | ௦ |
| **கா. முத்துபட்டணம்.** | | |
| சொ நா க சா ச மெய்யம்மை ஆச்சி | ௧ | ௦ |
| **அ. புதூர்.** | | |
| வயி நா நா க ராம வெ ராம அலமேலு ஆச்சி | ௧ | ௦ |
| **கோவிலூர்.** | | |
| மு மு முத்துவேலு பிள்ளை | ௧ | ௦ |
| **புதுவயல்.** | | |
| அரு காசிச்செட்டியார் | ௫ | ௦ |
| நடேசய்யர் | ௨ | ௦ |
| **காணுகோத்தான்.** | | |
| மு பி அ சுப்பய்யா பிள்ளை | ௧ | ௦ |
| **மானகிரி.** | | |
| அப்புஸாமி செட்டியார் | ௦ | ௮ |
| **ஆத்தங்குடி.** | | |
| பனா வீர ப செப்பி ஆச்சி | ௧ | ௦ |
| ஆக கூடியது ரூபா. | ௨௨௪ | ௧௦ |

க. மு. அ. முத்தப்பன்,
ஆ. சொக்கலிங்கம்,
காரியதரிசிகள்.

டயர் MICHELIN டியூப்

இப்பொழுது புதுமாதிரியான பட்டனுடன் மிகவும் திறமையாக செய்யப்பட்டு வந்துகொண்டிருக்கிறது. ஒரு முறை இந்த மிச்சிலின் டயர்களை உங்கள் கார்களில் போடுங்கள். அவை நீடித்த காலம் நன்ருய் உழைக்கும்.

ஏ. வி. அன் சன்ஸ்,
காரைக்குடி.

ஒருமுறை யான்மார்க்கு வாசனைப்பாக்கை வாங்கி உபயோகியுங்கள். வாசனைப் பாக்கில் உயர்ந்தது இதுதான்.

ஏ. வி. & சன்ஸ்,
காரைக்குடி.

நீங்கள் எதிர்பார்த்திருந்த
## இன்பரகசியம்.

வெளிவந்து விட்டது! வாங்கிப்பாருங்கள்!!

| | ரு. | அ. | | ரு. | அ. |
|---|---|---|---|---|---|
| ஜீவவசிய பரமரகசியம் | 3 | 0 | ஸ்திரிபுருஷ சமத்துவம் | 1 | 0 |
| மணவாழ்க்கையின் மர்மம் | 2 | 4 | மதனரதிரகசியம் | 1 | 0 |
| இல்வாழ்க்கையின் இரகசியங்கள் | 2 | 0 | ஸ்திரீ புருஷ ரகசியம் | 1 | 0 |
| மதிமோசக்களஞ்சியம் 2பாகம் | 2 | 0 | காதற்கடிதங்கள் | 0 | 12 |
| மனோவசிய சாஸ்திரம் | 1 | 8 | மஹேந்திர ஜாலம் | 0 | 12 |
| கைத்தொழில் வணிகரகசியம் | 1 | 8 | இரதிமதனசிருங்காரரகசியம் | 0 | 12 |
| மாயாஜால விநோதம் | 1 | 0 | சிற்றின்பசாஸ்திரசிந்தாமணி | 0 | 8 |
| தம்பதிகளின் மர்மம் | 1 | 0 | இரகசியசாஸ்திரசிந்தாமணி | 0 | 8 |
| சரீரமர்ம சாஸ்திரம் | 1 | 0 | விகடசித்தர்கோவை | 0 | 8 |
| பிரம்மஞானபரம ரகசியம் | 1 | 0 | இல்லற இன்ப ரகசியம் | 0 | 8 |

பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை ரூ. 2 0 0

குறிப்பு:—வி—பி. சட்டமில்லாத பினங்கு, சிங்கப்பூர், கோலாலம்பூர் முதலிய வெளிநாட்டு நண்பர்கள் புத்தக விலையுடன், தபால் செலவையுஞ் சேர்த்து முன்பணமாக அனுப்பிப் பெறவும். ஆர்டருக்கு சேட்லாக்கு இனாம்.

விலாசம்:—கலைமகள் புத்தகசாலை, சௌகார்பேட்டை, சென்னை.

உற்சாகம்
ஊக்கம்—பலம்.

இவைகளையடைய எங்கள் உலகப்பிரசித்தி பெற்றதும் சென்ற 46-வருஷ காலமாககுணங் கொடுப்பதில் சிறந்ததென்று கொண்டாடப் பட்டதுமான எங்கள்

ஆதங்க நிக்ரஹ மாத்ரைகளை உபயோகியுங்கள். இன்னும் மேற்படி மாத்ரைகள் மலச்சிக்கல், தேக அசதி, ஞாபகக்குறைவு, பசியின்மை முதலிய வியாதிகளை சாஸ்தமாகக் கண்டிக்கின்றன.

32 மாத்ரைகளடங்கிய டப்பி 1-க்கு ரூ. 1.

இனாம்! இனாம்!!

உற்சாகமான கதைகள்.
(20-சிறுகதைகளடங்கிய புஸ்தகம்) இன்றைக்கே எழுதுங்கள்.

ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம்,
26 பிராட்வே, மதராஸ்.

சதா நீங்கள் சிரிக்கவேண்டுமானல்?
### கலியுகப் புளுகன்.

இந்தக் கதையின் ஒவ்வொரு அத்தியாயத்தையும் படித்துவிட்டால் ஓய்வின்றிச் சதாகாலமும் சிரிப்பீர்கள். இதன் விலை அணா 8. வேண்டுவோர் 8-அணா ஸ்டாம்பு அனுப்பவும், எந்த தேசத்து ஸ்டாம்பாயிருந்தாலும் அனுப்பலாம்.

தர்மவாசகம் 32-ம் சச்சிதானந்த சிவம் தானே விலை அணா 3, 4 அணா ஸ்டாம்பு அனுப்பவும்.

### மாதர் நீதி.

இல்லறத்தை நல்லறமாக்க நீதியுடன் நடத்த விரும்புவோருக் கவசியமான நூல், இளமைப்பருவம், கணவரோடு கூடிவாழும் பருவம், முதுமைப் பருவம் என மூன்று பருவங்களில் பலநீதிகளும் அந்நீதிகளைப் போதிக்கத்தக்க பல அற்புத கதைகளுமுள்ளன, திருத்தமான 5-ம் பதிப்பு வெளியாய்ச் சொற்ப தினங்களில் ஏராளமாய்ச் செலவாகிறது. இன்னும் சொற்பப் பிரதிகளே யுள்ளன. விலை ரூ. 1. (தபாற்கூலி வேறு)

ஸ்ரீ சாம்பவி அண்டு கம்பெனி,
(3) பாக்டவுன் சென்னை.

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.
ஏன் நீங்கள் கஷ்டப்படுவானேன்.

நான் உங்கள் ஜலதோஷம், வயிற்றுவலி, கால்கைபிடிப்பு, அஜீர்ணம், காச்சல், காலரா, தலைவலி வாராமல் காத்துக் கொள்வேன்.

நான்தான் எல்லோரும் போற்றும்
## 'ஜீவரசம்.'

என்னை உங்களிடம் சேர்க்க ரூபாய் இரண்டுதான்.
உடனே வாங்குங்கள்.

ஜீவரசம் அன் கோ, காரைக்குடி.

கூஉ தருமவாசகம்.
சச்சிதானந்தசிவம் தானே.

இவ்விரண்டு வியாசம் வேதாந்தபோதகர் ஸ்ரீ சாது கோ. வடிவேலு செட்டியார் எழுதியது 4 அணா தபால் முத்திரை அனுப்பினால் அனுப்புவோம்.

ஸ்ரீ சாம்பவி அண்டு கம்பெனி,
நயினியப்ப நாயக்கன் தெரு,
P. T. (கு) சென்னை.

ஏஜண்டுகள் தேவை.

பலரகம் ஷர்ட்டு தினுசுகள், துண்டுகள், வலை பனியன்கள் முதலிய பல தினுசுகளுக்கு ஆர்டர் வாங்கி அனுப்பித்தருகிறதற்கு ஏஜண்டுகள் தேவை. மற்ற விபரங்கள் கீழ்கண்ட விலாசத்திற்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

M. B. SYNDICATE,
Auvaneeswarem
Travancore.

இனாம்! இனாம்!!

சாரவிவேகி, சதாநந்தன் சம்பாஷணை "கிழவன் குமாரனான்" இவ்விரண்டு கதைகள் அடங்கிய புத்தகம் தங்கள் விலாசம் தெரிவித்தால் இனாமாக அனுப்புவோம்.

ஸ்ரீ சாதுரத்தின சற்குருபுத்தகசாலை,
பார்க்டவுன், (P. O.) சென்னை.

22 காரட் ரோல்ட் கோல்ட் கை கெடியாரம்.

இது பார்வைக்கு வெகு அழகாக இருக்கும். உறுதியான சாமான்களால் செய்யப்பட்டது. சரியான மணி காட்டக் கூடியது. கோல்டு கில்டு டயலை யுடையது. ஆண் பெண் இருதாத்தாரும் கையில் அணிய வெகு நன்ருய் இருக்கும் இத்துடன் கையில் அணியும் தோல்பட்டை ஒன்று இனாமாக அனுப்பப்படும் விலை ரூ. 7—0—0.

வெல்வோர்த் &கோ
ஜார்ஜ்டவுன் மதராஸ்

## தேச நேசன்.

அறிவு வளர்ச்சிக்கான பல அரியவிஷயங்கள் அடங்கிய ஓர் உயர்தர தமிழ் மாதாந்தம் பத்திரிகை தபாற்கூலி உள்பட வருஷசந்தா ரூ. 1. குறைந்த சந்தாவுள்ள உயர்தர பத்திரிகை இது ஒன்றே. மாதிரி காபி இனாம்.

வி. என். சாமராவ் அண்ட், கம்பெனி,
ஜார்ஜ்டவுன், மதராஸ்.

இனாம்! இனாம்!! இனாம்!!!

குளிர்ச்சி பொருந்திய ஓர் மூக்குக்கண்ணாடியும் ஓர் பவுண்டன் பேனாவும் இனாமாய்த் தரப்படும்.

(தானாக வரும் அதிர்ஷ்டத்தைக் கைவிடாதீர்கள்.)

எங்களுடைய ரிஸ்ட் வாட்ச கடியாரம் 10 வருடத்திற்கு காரண்டி என்று கேசின் உள்புறத்தில் ஸ்டாம்பு குத்தியுள்ளதும், ஆண் பெண் இருவர்களும் அணியக்கூடிய பூஷணங்களில் இது ஓர் நவபூஷணமாக ஜொலித்து, சரியான காலத்தைக் காட்டக்கூடியதும், வெகு அழகையும் மதிப்பையும் தரக்கூடியதுமான இயந்திரம் இதுவே. இது கைதேர்ந்த மெகானிக்கல் இஞ்சினியர்களால் அதிக முயற்சியோடு செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு கடியாரத்தையும் பரிக்ஷித்து அனுப்புகிற வழக்கம் எங்கள் கம்பெனியைவிட்டு விலகவில்லை என்பது திண்ணம்.

விலாசம்:— ஓவர்ஸீ ஸ்சுவிஸ் வாட்ச் சம்பெனி,
தபால்பெட்டி நெ. 371, மவுண்ட்ரோட், மதராஸ்.

இனாம்! இனாம்!!

பள்ளியறைக்கான அழகிய பாரிஸ்மாதரின் போஸ்டுகார்டு படங்கள் 50.

14 K. T. கோல்டு பிளேட் நிப்புடைய உயர்ந்த பௌண்டன் பேனா 1-க்கு ரூ. 1-8-0-க்கு ஆர்டர் செய்வோருக்கு மேற்சொல்லிய 50 படங்கள் இலவசமாய் அனுப்புகிறோம். உடனே முந்துங்கள். விலாசம்:— சிகார்பாக்டரி
தங்கசாலை போஸ்டுக்கு எதிர், சென்னை.



# அபூர்வசிகிச்சை

## அதிசய குணந்தரக்கூடிய மருந்துகள்.

தேர்ச்சிபெற்ற மலையாள வைத்தியர்களைக் கொண்டு, தாரை, பிழிச்சல், கிழி முதலிய பிரசித்திபெற்ற ஆயுர்வேத முறைப்படி, சகலவிதமான வாதரோகங்களுக்கும் இந்த வைத்திய நிலையத்தில் சிகித்சை செய்யப்பெறும். வாதரோகங்கள் எவ்வளவு நீடித்தகாலமானவையானாலும் சரி, எவ்வளவு கடினமானவையானாலும்சரி, குணமாவது திண்ணம். அற்புத குணத்தைத் தரக்கூடிய வைத்தியம் இருக்கும்பொழுது, வாதரோகிகள் ஏன் கஷ்டம் அடைந்துகொண்டிருக்க வேண்டும்? ஆகையால் வைத்தியம் செய்துகொள்ள முந்துங்கள்.

### இன்னும் திட்டமாக குணமாகும் வியாதிகள்.

(1) மேரோகங்கள், கிரந்திரோகங்கள், சூலைரோகங்கள்

(2) இருமல், இழைப்பு, சுவாசகாச முதலிய கபரோகங்கள்.

செலவு முதலிய தகவல்களை நேரில் அறிந்துகொள்ளவும்.

ஆயுர்வேத சித்தவைத்திய நிலயம்,
நாச்சியார்புரம் (ராமனாதபுரம் ஜில்லா.)

புதிய சங்கீத புஸ்தகம்.
பிரசித்திபெற்ற நூலாசிரியர் வித்வான் கே. வி. ஸ்ரீநிவாசய்யங்கார் இயற்றியது.

## ஸங்கீத சிந்தாமணி.

விலை ரூபா 3—0—0

இது ஸங்கீத வித்தியார்த்திகட்கும், உபாத்தியாயர்கட்கும், பாடகர்கட்கும் இன்றியமையாத ஓர் அரிய புத்தகம்.

இதுவரையிலும் வெளிவராத தியாகராஜ கீர்த்தனைகள், இன்னும் அநேக பிரசித்தி பெற்ற வித்துவான்களின் நூதன கீர்த்தனைகள் முதலியவைகள் ஸ்வரதானங்களுடனும் ராகலக்ஷணங்களுடனும் அச்சிடப்பட்டிருக்கின்றன.

குறிப்பு:—அக்டோபர் மாதம் 31-ம் தேதிக்குள் இப்பத்திரிகையின் பெயரைக் குறிப்பிட்டு ஆர்டர் செய்பவர்கட்கு தபாற் செலவு இனாம்.

முழு விவரத்துக்கு கீழ் காணும் விலாசத்துக்கு எழுதவும்.

எம். எஸ். ராமுலு கம்பெனி,
இராயபுரம், மதராஸ்.

படுக்கை அறையில்.
சிங்காரிக்கத்தக்க இன்பமளிக்கும் போட்டோ படங்கள்.

12 ரகங்கள் கொண்ட லீலாவிநோத படங்கள் அடங்கிய போட்டோ புத்தகம் (Photo album) 1-க்கு விலை ரூ. 2.

மதராஸ் மெயில் ஆர்டர் கம்பெனி,
மிண்டுபோஸ்டு, மதராஸ்.

தேவை.

எவ்வளவு நாள் பட்ட எந்தவித வியாதியினால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த போதிலும் சரி, உடனே நமக்கு ½ அணா ஸ்டாம்புடன் விவரம் அனுப்புக.
ப்ரொபஸர் C/o ஊழியன் காரைக்குடி.

"ஜீவரசம்"
காரைக்குடி.
11-10-27

நண்பரே!
என் பயம்!

ஜீ நான் உங்கள் கஷ்டகாலத்தில் உதவுவேன். உங்கள் மடியிலி
வ ருக்கக்கூடிய நண்பன் நானே.
என் சேவையை எல்லாருமெச்சி நற்சாக்ஷி பத்திரம்
ர அளித்துள்ளார்கள். என் எஜமான் என்னை இரண்டு ரூபாய்க்
ச குள் உங்களிடம் சேர்க்கிறார். எவ்வளவு ஜீவகாருண்ணியம்
ம் பார்த்தீர்களா?

இங்ஙனம்,
தங்கள் ஊழியன்,
ஜீவரசம்.

டாக்டர் ஜீ. பி. என்பவரின்
## சுகந்த மூக்குத்தூள்.

இதை உபயோகித்தால் ஜலதோஷம், ஒற்றைத் தலைவலி மண்டைக் குத்தல் உள்பட கண்டத்திற்கு மேற்பட்ட சகல வியாதிகளையும் வெகு சீக்கிரத்தில் கண்டிக்கும்.

புட்டி 1-க்கு விலை அணா 4.

மொத்த வியாபாரிக்கு விலை சகாயம் செய்யப்படும்.

குருபசவா அண்டு கம்பெனி
(லிமிடெட்.)
பார்க்டவுன், சென்னை.

தந்தி விலாசம்:—"மெடிகேட்"
தபாற் பெட்டி நெ. 510.

(ரிஜிஸ்டர் டிரேட்மார்க்.)

ராய. சொக்கலிங்கனால் காரைக்குடி ஊழியன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

"யௌவனத்தன்மை அநேகமாய் போய்விட்டது" என்ற நிலையடைந்த பொழுதிலுங்கூட மனுஷன் இதை உபயோகித்தால் யௌவனத்தை மீண்டும் அடைவான்.

தாதுக்கள் க்ஷீணித்துப்போவதன் காரணங்கள் ஆறு என்று வைத்திய சாஸ்திரங்கள் பேசுகின்றன. அவை:- 1. மனத்தின் வேதனை. 2. மனதிற்கு பிடித்தமில்லாத மனையாளுடன் வாழ்தல் 3. வெண்மையாயும் காரமுள்ளதாயுமிருக்கிற நிண்டங்களை உபயோகிப்பதனால் உண்டாகின்ற இந்திரியவொழுக்கு(வீரியஸ்கலனம்) 4. அமித சம்போகம், ஆகாரத்தட்டு என்பவை. சரீரத்தின் மூக்கியமான அவயவங்களில் வெகு காலமாய் பாவியுள்ள ஸ்திரீ சம்பந்தம் முற்றும் இல்லாமை.

இவைகளின் அடையாளங்கள் குறிகள் யாவை எனக் கவனியுங்கள்! சிந்தித்து பாருங்கள்!

"ஸ்திரீசுகம் வேண்டும்-அதை அநுபவிக்கவேண்டும்" என்ற எண்ணத்துடன் ஒரு ஸ்திரீயின் பக்கத்தில் சென்றவுடன் யாதொரு சிரமமில்லாமல் தன்னையறியாமலே வீரியம் நழுவிப் போகும்! சில ஸமயங்களில் ஸ்கலனம் நின்றுபோய்விட்டது என்ற நினைவுகூடத் தனக்குத் தெரியாது. பசி, தாகம் உண்டாயிருக்கின்றது என்பதுந்தோன்றாது. மலபந்தம் இருக்கும். தலை கிறுகிறுக்கும். வேலையில் சோம்பல் (அக்கரையின்மை) நிறைந்திருக்கும். இவைதான் அடையாளங்கள்.

இந்த அவலக்ஷணங்களை (கெட்டகுறிகளை) யெல்லாம் அடியோடு நீக்குதற்கு சரியானது எங்களுடைய மதமோகன ஔஷதந்தான். ராமபாணம் போன்றது. அது தாதுபலத்தை உண்டாக்கி, இந்திரியத்திலுள்ள குற்றங்களையொழித்து அக்னிமந்தத்தை அறவே செய்து மலபந்தத்தை முற்றுமொழித்து, தலைக்கிறுகிறுப்பைத்தக்கவாறு நிறுத்தி, இந்திரியஸ்கலனத்தை இல்லாமற்செய்து பலபராக்கிரமத்தை புஷ்டி செய்யும்

விவாகம் ஆனபின்னர் தமது மனைவியுடன் இன்பமனுபவித்த சிலர் தங்களுடைய போகானுபவ காலம் மிக சொல்பமும் க்ஷணநேரமுமாக இருப்பதாய் அறிகிறார்கள். இதன் காரணம் தம் தேகத்தில் வீரிய சைதந்யங்கள் குறைந்திருப்பதுதான். ஆனால் அவர்களின் ஆசைகள் அதிககால போகமனுபவிப்பதில் தான் பற்றி நிற்கின்றன என்றாலும் அவர்களின் சரீர வீரிய பலம் நீண்டகால சுகபோகத்திற்குச்சம்மதிப்பதில்லை. இவ்விதம் நிலைமையில் கிடந்து தவிப்போரின் தவிப்பைப்போக்குவது மதனமோஹனந்தான்! மேலே தெரிவித்த கேடுகளை நீக்கி, சுரத (போக) ஆனந்தத்தைத்தெளிவாக அனுபவிக்கச்செய்து, ஜனன இந்திரியங்களுக்கு அவற்றின் சுக சுதந்தர வேலைகளுக்கு எவ்விதத்தங்கு தடையும் வாராதபடி செய்து, அவற்றின் காரியங்களை நன்கு நிர்வகிக்கும் படி செய்வதும் மதனமோகனந்தான். இந்த குளிகைகள் சரீரபல சைதன்ய பௌருஷங்களைப் புஷ்டியாக்கும். தேக அவயவங்கள் தம்தம் வேலைகளை உறுதியாக நிர்வகிக்கச்செய்யும். மேதை, மஜ்ஜை (ஈணநீர்) முதலியவைகளுக்கு உண்டான குற்றங்களை நிவர்த்திசெய்து, ஜனங்களை நீர்க்ககால சுபபோகக்கிரீடைக்கும், பரஸ்பர திருப்திகரமான சம்யோகங்களுக்கும் தக்க குளிகைகள் இவைகளே.

| | | | | |
|---|---|---|---|---|
| 30 குளிகைகள் அடக்கிய பெட்டி 1 க்கு விலை | ரூ | 2 | 0 | 0 |
| டிட்டோ 3 க்கு ,, | ,, | 5 | 4 | 0 |

தபால் கூலி வேறு.

## மதனமோகன துளி.

துர்லபமான சில தருணங்களில்—சிலசமயம்—நாயகனுடைய சாமர்த்யக்குறைவு தோன்றலானது அவருடைய உள் அவயவசக்திக்குறைவாலல்ல. உள்ளே அவயவங்களுக்கு சக்தியும் சைதன்யமும் (உணர்ச்சியறிவும்) இருக்கலாம். ஆனால், ஆண்மையின் அடையாளமாகிய பீஜத்திற்கு அசதியுண்டாகி, அது வாடி பல ஈனமுற்று, செத்தது போலிருக்கும். அது உயிருள்ளதானாலும், சுரதக்கிரீடைக்கு உதவியாவதல்ல. நாயகனுடைய மனோவிருத்தியும் வாசுபலமுமுள்ளதாகக்காணப்பட்டது, என்றாலும், கிரியாம்சத்தில் (செய்கையில்) அவ்வவயவத்திற்குக்சாமர்த்தயில்லாததாகத்தோன்றலாம். இந்த சங்கட நிலையில் நாயகன் சுரதக்கிரீடையை ஒருவிதமாக முடிப்பான் என்றாலும், தன்னோடு கிரியா சுகத்தைச் சேர்ந்து அனுபவிக்கின்ற நாயகிக்கு சம்போக முடிவில் அவளது ஆவல் பூர்த்தியாகாமையும் நிராசையும் "இனி, என்ன செய்வது" என்பதையறியமுடியாமையால், விசனமும், நாயகன் மேல் நிந்தாவேசமும் வெறுப்பும் சம்பவிக்கும். இது ஒரு புருஷனுக்கு எவ்வளவு வெட்கத்துக்கும் துன்பத்துக்கும் காரணமாகின்றது!

இவர்போன்ற தரத்திலுள்ளவர்க்குத்தான் நாங்கள் 'இந்தமதனபிந்துவை உபயோகியுங்கள்' என்று சொல்லுகின்றோம், புருஷக்குறியாகிய அவயவத்தின் மேல் லேபனம் (பூச்சு) செய்தால் இந்த ஔஷதமானது தனது சாமர்த்தியத்தினால் குறித்த அவயவத்திற்கு முன் கிடைத்திராத ஜீவசக்தியையும் காரிய நிர்வாகத்திறமையையும் சைதன்யத்தையும் கொடுக்கும். அப்பொழுது செய்கின்ற பரஸ்பர சங்கம் இருவர் மனத்திற்கு இன்பம் தருவதாய், நாயகநாயகியர்களைப்புலர்த்தி விட்டு, உலகத்தில் திட சரீரிகளாய் விளங்குகின்ற அவரது தேஹங்களெல்லாம் எவ்வாறு திட இன்பம் அனுபவிக்கின்றனரோ அவ்வாறுள்ள இன்பத்தில் இவர்களை ஆழ்த்தி, அன்றுமுதல் அவ்விருவரும் உளளன்பு—மெய்க்காதல்— நிறைந்த தம்பதிகளாக வாழச்செய்யும்.

இந்த லேபனப்பிரயோகம் நாயகியின் கண்களில் புலப்படாவண்ணம் ரகசியமாயும் நடத்தலாம், அவள் அறிந்தால் ஏதேனும் பரிகாசம் செய்வாளோ எனவும் பயப்படவேண்டாம்.

| | | |
|---|---|---|
| ஒரு சீசா 1-க்கு விலை | ரூ | 1-8-0. |
| 3-க்கு | | 3-12-0. |

## மதனமோஹனதைலாத்தினம்.

இம்மொரு கஷ்டமில்லைதான்! எவர் இல்லை என்றனர்? அநேக குடும்பங்களிலே முன் அவரவர் செய்திருக்கின்ற அமித சம்போகத்தினாலும், வாலிபப்பருவத்தில் செய்த அடாபிடி (துர்) செய்கைகளாலும் கணவர்கள் நவவாலிபப்பருவத்தில் ஆண்குறி பலமழிவதால் சந்தானலாபவழியற்றவர்களாய், உவர்மண்போல் வீணாகின்றனர். வயது நல்ல வாலிபப்பருவத்தையடைந்து தானிருக்கின்றது. நீண்ட வாழ்நாள் இன்னும் தன் முன்னே கிடக்கத்தான் செய்கின்றது. ஜீவித தினங்கள்—இவர் வாழ்கின்ற ஒவ்வொரு நாட்களும் இவர்க்கு அனர்த்த சங்கடநாட்கள்தான்! என்றாலும் இவ்விதம் இழந்த ஆண் குறி பீஜசக்தியுடைய இனத்தாரின் பாக்யவசமால் ஒரு பெருவழி திறந்து கொடுக்கப்பட்டிருக்கின்றது. அதாவது இந்தத்தைலத்தை உபயோகித்து நலம் பெறுதலாகிய உத்தம உபாயம். அவர்களின் ஆசை பூர்த்தியாகத்தக்க முறை இத்தைலத்தில் அடங்கியிருக்கின்றது.

ஆண் குறியின் மேல் இதை தடவும்பொழுது அந்த அவயவத்திலுள்ள நாடி நரம்புகளுக்கு ஒரு புதிய உயிரும் உணர்ச்சியும் ஜீவசக்தியும் உற்பத்தியாவதுடன், அதன் சோம்பல்—அசதி நீர்ந்து அந்த அவயவமானது மீண்டும் வீர எழுச்சி பெற்று, சுரதகாரியத்தைச்செவ்வனே நிறைவேற்றத்தக்க சக்தியுடையதாகவும் ஆகின்றது. 3 நாள் இந்த மருந்தை உபயோகித்தால் பலிதம் காணப்படும். இது ஒரு ஆச்சரியமான மருந்துதான்!

| | |
|---|---|
| சீசா 1-க்கு விலை | 1-8-0. |
| 3-க்கு | 3-12-0. |

சிங்கப்பூர். F. M. S. போர்னியோ, முதலிய தூரதேசங்களின்றும் மருந்துவாங்குவோர்க்கு வி. பி. பி. வழக்கம் நடைபெற்று வருகின்ற இடங்களுக்குக்கூட நாங்கள் அந்த முறையாகவோ, அல்லது C. O. D. வழியாகவோ நாங்கள் எங்களுடைய மருந்துகளை அனுப்புவதில்லை. பங்கிகளும் பார்ஸல்களும் கைப்பற்றாது நஷ்டம் வருகின்றது மேலும் அவ்வாறு சிலர் ஆர்டர் செய்ததை நம்பி எங்களால் அனுப்பப்பட்டும் கைப்பற்றப்படாமல் திரும்பிவருகின்றவைகளுக்கு இருபங்கு தபால் கூலியும் ஏற்படுகின்றது. மேற்கூறிய ஸ்தலங்களிலுள்ள உள்ளவர்களுக்கு விளங்குதற்காக—கட்டுக்கூலி, தபால் சார்ஜு உள்பட இதனடியில் தெரிவிக்கிறோம். அவற்றை கவனித்து, ஆர்டர் செய்யும் நேயர்கள் தமது எல்லா ஆர்டர்களையும் அம்மருந்துகளுக்கு ஆகிறகிரயத்தையும் தபால் கட்டுக்கூலியுடன் சேர்த்தே முழுதும் முன்பணமாக அனுப்பிவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். ஆனால், இந்தியா, பர்மா, ஸிலோன், ஆகிய இவ்விடங்களிலுள்ள நம் வாடிக்கைக்காரநேயர்களுக்கு ஔஷதங்கள் வி. பி. பி. வழியாக அனுப்பிக்கொடுக்கலாம்,

| | | |
|---|---|---|
| குளிகைகள் பெட்டி 1-க்கு | ஷில்லிங் | 7½ |
| டிட்டோ 3-க்கு | டிட்டோ | 14 |
| பிந்துக்கள், எண்ணெகள் சீசா 1-க்கு | | 7½ ஷில்லிங் |
| 3 குப்பிக்கு | | 14 ஷில்லிங் |
| 6 குப்பிக்கு | பவுண்டு | 1 |

## ஆரோக்கியம், கிருகசௌக்கியம், ஜீவித ஆனந்தம்.

தேச ஆரோக்கியம் உண்டானால் 'மனையும் மனையாளின் இன்பமும் அடையவேண்டுமென்ற ஆசை தோன்றுவது நியாயந்தான். குடும்பசுகமுண்டென்றால் மனைவிமக்கள் முதலானவர்களிடத்தினின்றும் ஜீவித ஆனந்தம் தோன்றுகின்றது! இந்த ஜீவித ஆனந்தம் இல்லாவிடில் வீடும் மனையும் குடும்பசொத்தும் எல்லாம் காடாகவும் பாலைவனமாகவும் மாறித்தோன்றும். ஜீவித ஆனந்தம் சரீரசுகத்தைத்தொட்டுப்பிடித்துக்கொண்டு நிற்கின்றது, ஆதலால், சரீரசௌக்கிய ஆரோக்கியத்தை நிலைநிறுத்தி சுகமே பல்லூழிகாலம் பேரானந்தத்துடன் வாழமுயற்சி செய்யுங்கள்!

மருந்துகளுக்குக் கடிதங்களும் ரிஜிஸ்தர்தபால்களும் உண்டியல்களும் செக்குகளும் போஸ்டோர்டுகளும் பாங்கிகளுக்கான ஹூண்டிகளும் இங்கு கீழே காணப்படுகின்ற விலாசத்திற்கு அனுப்பிவைக்குமாறு வேண்டுகிறோம்.

டி. எஸ். சுப்பிரமணிய அண்டு கோ.,
கவிராஜ ஆயுர்வேத வைத்தியர்கள்,
மெயின்ரோட், கொல்லம்
(திருவிதாங்கூர்) தென் இந்தியா.

